மலர் 15 இதழ் 280

NAVAMANI (Tamil Daily) MADRAS

4 பக்கம் 25 காசு

Regd M No. 7897

Phone No. 76190; 76199



# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 24-6-75 செவ்வாய் வெளியூர் 25-6-75 புதன்

சுப்பிரமணியத்துக்கு ராசாராம் கடிதம்
4-ம் பக்கம்

## மக்கள் சபையில் இந்திராவுக்கு ஓட்டு இல்லை: சுப்ரீம்கோர்ட் தீர்ப்பு

# பிரதமர் பதவியில் இந்திரா நீடிக்கலாம்

புதுடெல்லி, ஜூன் 24— "இந்திரா காந்தி பிரதமர் பதவியில் நீடிக்கலாம். பிரதமர் என்ற முறையில் சபை நடவடிக்கைகளில் பங்கு கொள்ளலாம். எனினும் ஓட்டளிக்க கூடாது" என்று சுப்ரீம் கோர்ட் நீதிபதி வி. ஆர். கிருஷ்ணய்யர் இன்று தீர்ப்பு அளித்தார்.

பிரதமர் இந்திரா காந்தி மக்கள் சபை உறுப்பினர் என்ற முறையில் சம்பளம் வாங்கவும் கூடாது என்று சுப்ரீம் கோர்ட் நீதிபதி தனது தீர்ப்பில் கூறியுள்ளார். ஹைகோர்ட் தீர்ப்பின் அமுல் மீது நிபந்தனையின்றி பூரணத் தடைவிதிக்க வேண்டும் என்று இந்திரா விடுத்த கோரிக்கையை சுப்ரீம்கோர்ட் ஏற்கவில்லை.

எனினும் நீதிபதி வி. ஆர். கிருஷ்ணய்யர் நிபந்தனையுடன் ஹைகோர்ட் தீர்ப்பின் அமுல் மீது தடை விதித்துள்ளார்.

மக்கள் சபை நடவடிக்கைகளில் பிரதமர் என்ற முறையில் இந்திரா பங்கு கொள்ளலாம். என்றாலும் ஓட்டளிக்கக் கூடாது என்பது அந்த நிபந்தனையாகும்.

இந்திரா காந்தி 6 ஆண்டுகளுக்கு தேர்தலில் போட்டியிடக்கூடாது என்று ஹைகோர்ட் அளித்த தீர்ப்பின் அமுலையும் சுப்ரீம் கோர்ட் நிறுத்திவைத்துள்ளது.

சுப்ரீம் கோர்ட் நீதிபதி கிருஷ்ணய்யர் அளித்த தீர்ப்பு விவரம் வருமாறு:—

ஹைகோர்ட் தீர்ப்பை எதிர்த்து இந்திரா அப்பீல் செய்துள்ளதால் ஹைகோர்ட் தீர்ப்பின் அமுல் நிபந்தனையுடன் நிறுத்திவைக்கப்படுகிறது.

இந்திரா 6 ஆண்டுகளுக்கு தேர்தலில் போட்டியிடக் கூடாது என்ற தீர்ப்பும் நிறுத்திவைக்கப்படுகிறது. இந்திரா காந்தி தொடர்ந்து மக்கள் சபை உறுப்பினராக இருந்து வரலாம். பிரதமராகவும் இருந்து வரலாம்.

இந்திரா காந்தி மக்கள் சபை உறுப்பினர் என்ற முறையில் சபைக்கு வெளியே உள்ள ஆஜர்பட்டியலில் கையெழுத்திடலாம்.

மக்கள் சபைக்கு வரலாம். ஆனால் சபை உறுப்பினர் என்ற முறையில் மக்கள்சபை நடவடிக்கைகளில் பங்கு கொள்ளக்கூடாது. சம்பளமும் வாங்கக்கூடாது.

### ஓட்டுரிமை இல்லை

ஆனால் பிரதமர் என்னும் முறையில் பார்லிமெண்ட் நடவடிக்கைகளில் பங்கு கொள்ளலாம். ஆனால் சபையில் ஓட்டளிக்கக்கூடாது.

ரேபரேலி தொகுதியிலிருந்து மக்கள் சபைக்கு பிரதமர் இந்திரா காந்தி தேர்ந்தெடுக்கப்பட்டது செல்லாது என்றும், இந்திரா காந்தி 6 ஆண்டுகளுக்கு தேர்தலில் போட்டியிடக்கூடாது என்றும் அலகாபாத் ஹைகோர்ட் நீதிபதி சின்கா கடந்த 12-ந் தேதி தீர்ப்பளித்தது நினைவிருக்கலாம். அதே நீதிபதி தமது தீர்ப்பின் அமுலை பூரணமாக நிறுத்தி வைத்து இடைக்காலத்தடை உத்தரவு பிறப்பித்திருந்தார்.

அலகாபாத் ஹைகோர்ட் தீர்ப்பை ஆட்சேபித்து இந்திரா காந்தி நேற்று சுப்ரீம கோர்ட்டில் அப்பீல் தாக்கல் செய்தவுடன் அலகாபாத் ஹைகோர்ட் அளித்த இடைக்காலத் தடை காலாவதியாகியது.

எனவே ஹைகோர்ட் தீர்ப்பின் அமுலை நிபந்தனையில்லாமல் பூரணமாக நிறுத்தி வைத்து தடை உத்தரவு போட வேண்டும் என்று கோரி நேற்று பிரதமர் இந்திரா காந்தி சார்பில் ஒருமனு தாக்கல் செய்யப்பட்டது.



இந்த மனுவை சுப்ரீம் கோர்ட் நீதிபதி வி. ஆர். கிருஷ்ணய்யர் நேற்றுவிசாரித்தார்.

அந்த மனு பற்றி இன்று பிற்பகல் 3-45 மணிக்கு கிருஷ்ணய்யர் தமது தீர்ப்பை அளித்தார்.

நீதிபதி நேற்றே அறிவித்தபடி இத்தீர்ப்பு நேற்றிலிருந்தே அமுலுக்கு வந்ததாகக் கருதப்படும்.

இனி அடுத்து ஹைகோர்ட் தீர்ப்பை ஆட்சேபித்து இந்திரா காந்தி போட்டுள்ள அப்பீல் வழக்கு அடுத்த மாதம விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்படும்.

## தியேட்டரில் தகராறு: பையன் கொலை

சென்னை, ஜூன் 24— சென்னை சினிமா தியேட்டர் ஒன்றில் பையன் ஒருவன் நேற்று அடிக்கப்பட்டு மரணமடைந்தான்.

இது குறித்த விவரமாவது: நேற்று இரவு அண்ணாசாலையில் உள்ள சினிமா தியேட்டரில் மனோகரன் என்ற 15 வயது சிறுவன் 2 நண்பர்களுடன் டிக்கெட் வாங்க கியூவில நின்றான்.

மனோகரன் உள்ளேசினிமா திரையை எட்டிப்பார்த்தானாம். அப்போது இருதயராஜ் என்ற மற்றொரு 15 வயது பையனும் திரையை எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தானாம்.

மனோகரன் எட்டிப்பார்ப்பதை இருதயராஜ் ஆட்சேபித்தானாம். இருவருக்கும் மோதல் ஏற்படவே மனோகரனை இருதயராஜ் அடித்திருக்கிறானாம், மனோகரன் அங்கேயே மயங்கி விழுந்தான்.

வீட்டுக்கு எடுத்துச் செல்லப்பட்ட மனோகரனை அவனது தந்தை ராயப்பேட்டை ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் சென்றார். ஆனால் அங்கு மனோகரனுக்கு சிகிச்சை பலனளிக்கவில்லை. மனோகரன் நேற்றிரவு மரணமடைந்தான்.

தியேட்டர் காவலாளி கொடுத்த புகாரின் பேரில், போலீசார் வழக்கு பதிவு செய்து புலன் விசாரித்து வருகின்றனர்.

சிறுவன் இருதயராஜ் கைது செய்யப்பட்டான்.

## அரிசியை கேரளத்துக்கு ஏற்றுமதி செய்ததேன்: ராம்சந்தர் விளக்கம்

சென்னை, ஜூன் 24— "அரிசியை கேரளத்துக்கு ஏற்றுமதி செய்ய முடிவு எடுத்ததற்கு காரணம் அங்கு அரிசிக்கு நல்ல மார்க்கெட் இருந்ததேயாகும்" என்று நீதி விசாரணைக் கமிஷன் முன்பாக முன்னாள் உணவுத்துறைச் செயலாளர் ராம்சந்தர் குறுக்கு விசாரணையின்போது கூறினார்,

ரூ. 1½ கோடி அரிசி பேரஊழலில் அமைச்சர் ப. உ.ச. மீது கூறப்பட்ட புகாருக்கு ஆதாரம் உண்டா? என்பது பற்றி ஆராயும நீதி விசாரணைக் கமிஷன் நீதிபதி டி. ராமபிரசாத் ராவ் முன்பாக ராம்சந்தர் தொடர்ந்து குறுக்கு விசாரணை செய்யப்பட்டார்.

விசாரணைக் கமிஷன முன்பாக தாக்கல் செய்யப்பட்டுள்ள ஒரு பைலில் 7-வது 8-வது பக்கங்கள் ஒட்டப்பட்டுள்ளது பற்றி வழக்கறிஞர் கண்ணன், ராம்சந்தரிடம் கேட்டார். ஒட்டப் பட்டிருக்கும பக்கத்துக்குள் தொடரும்" என்று போடப்பட்டிருக்கிறதா என்று கேட்டார். இதற்கு ராம்சந்தர் ஆமாம் என்று பதிலளித்தார்.

கேள்விகளுக்கு பதிலளித்து ராமசந்தர் கூறியதாவது.—

கேரளத்துக்கு அரிசியை ஏற்றுமதி செய்ய முடிவு எடுத்ததற்குக் காரணம் அங்கு அரிசிக்கு நல்ல மார்க்கெட் இருந்ததேயாகும்" மேற்கு வங்கம் மகாரஷ்டிரா ஆகிய மாநிலங்களுக்கும் ஏற்றுமதி செய்யப்பட்டதா என்பதுபற்றி எனக்கு நினைவில்லை. கூட்டுறவுத் துறை செயலாளர் அரிசி ஏற்றுமதியை ஆட்சேபித்தாரா?என்பது பற்றிபைலில்எதுவுமில்லை.

தலைமைச் செயலக விதிமுறைப்படி 2செயலாளர்களுக்கிடையே கருத்து வேற்றுமை இருக்குமேயானால் சம்பந்தப்பட்ட அமைச்சரின் கவனத்துக்கு கொண்டு செல்லவேண்டும். பெடரேஷனின தலைவர் வி. எஸ். தியாகராஜ முதலியார் டன் ஒன்றுக்கு ரூ. 1150; அதற்கு மேல் ரூ. 275 விலை பெற விரும்பினாரா என்பது பற்றி எனக்குத் தெரியாது. அதுபற்றிக் கடிதத்தில் இல்லை பெடரேஷனுக்கு நஷ்டம் வரக்கூடாது என்ற கருத்தில் மத்திய அரசுக்கு ஒரு விலையைக் கூறினோம். தாண்டவராயனுக்கு விற்றபோது மார்க்கெட் விலையில் விற்கப்பட்டது. பெடரேஷன் நஷ்டம அடையாமல் இருக்க அரசாங்கம் உதவியது. தாண்டவராயன அரிசி இருப்பை எடுப்பதில் தாமதம் செய்ததால் அதற்கான தொகையை வசூலிக்கும்படி நான் உத்தரவிட்டேன். அது வசூல் செய்யப்பட்டதா என்பது எனக்குத் தெரியாது,

தனியாக தாண்டவராயனுடன் எந்த ஒப்பந்தமும் இல்லை. அரசாங்கம் விலையை கூறியது. தாண்டவராயன் அதை ஏற்றுக்கொண்டார். தாண்டவராயனுக்கு ஒப்புதல் கடிதம் கொடுக்கப்பட்டதா என்பது பற்றி எனக்கு நினைவில்லை. ஏ. எம். ஜம்புலிங்கமுதலியாருடன்பேசியது பற்றி எனக்கு நினைவில்லை என்று ராம்சந்தர் கூறினார்.

தாண்டவராயனுடன் எந்தவிதமான ஒப்பந்தமாவது செய்துகொள்ளப்பட்டதா என்று நீதிபதி கேட்ட கேள்விக்கு ராம்சந்தர் பதிலளிக்கையில் வழக்கமாக இதில் ஒப்பந்தம்இருப்பதில்லை ஒப்பந்தம் செய்யவேண்டும் என்று எதிர்பார்ப்பதுமில்லை என்று கூறினார்.

## 29-ந் தேதி இந்திரா எதிர்ப்பு கூட்டங்கள்

சென்னை, ஜூன் 24— ஜூன் 29-ம் தேதியை பிரதமர் இந்திரா வெளியேறவற்புறுத்தும் நாளாக அனுஷ்டிக்க தமிழ் நாடு ஜனசங்க கட்சி முடிவு செய்தது.

## பாங்காக்கில் இந்திய புத்தகக் கண்காட்சி

புதுடெல்லி, ஜூன் 24— 1975 ஜூன் 20-ம் தேதியன்று இந்தியப் புத்தங்கள், புகைப்படங்களின்கண்காட்சியொன்று பாங்காக்கில், தாய்லாந்து நாட்டு கல்வி அமைச்சர் நிபோன்தாஸ் கார்னுல் திறந்து வைக்கப்பட்டது. ஒரு வார காலத்துக்கான இந்தக் கண்காட்சியை தாய்—பாரத் கலாச்சார சங்கம் நடத்துகிறது.

## கடையநல்லூரில் மீண்டும் மோதல்: போலீஸ் கண்ணீர்புகை

திருநெல்வேலி, ஜூன் 24— கடையநல்லூரில் நேற்று மீண்டும் மோதல் ஏற்பட்டது. 50 கடைகள் தீக்கிரையாக்கப்பட்டன. மோதலில் சுமார் 100 பேர் காயமடைந்தனர்.

வன்முறைகும்பலைக் கலைக்க போலீசார் நேற்று கண்ணீர்ப் புகைப் பிரயோகம் செய்தனர்.

ஆட்டு கறிக்கடை சம்பந்தமாக தொடங்கிய சிறிய தகராறு பெரும் கலகமாக மாறிவிட்டது.

நேற்று முன் தினமும் கடைகள் சூறையும், தீ வைப்பும் நடத்தப்பட்டது.

இன்றும் பக்கத்து கிராமங்களிலிருந்து வந்த இரண்டு கோஷ்டியினர் மோதிக் கொண்டனர்.

50 வீடுகளுக்கு தீ வைக்கப்பட்டது, மரக்கடை ஒன்றும், தீப்பெட்டி தொழிற்சாலை ஒன்றும் தீக்கிரையாக்கப்பட்டன.

நேற்றைய மோதலில் 23 பேர் காயமடைந்தனர். இவர்களில் 10 பேர் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டுள்ளனர்.

### ஒருவர் நிலை கவலைக்கிடம்

நேற்று முன்தினம் நடந்த மோதலில் காயமடைந்த 70 பேர்களில் ஒருவரது நிலை கவலைக்கிடமாக இருப்பதாகக் கூறப்படுகிறது.

கடையநல்லூர் பகுதியில் 144 தடை உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருக்கிறது.

கலெக்டர் மாதவ சர்மாவும் போலீஸ் சூப்பிரண்டெண்டு ஹரிஹரனும் கடையநல்லூரில் முகாமிட்டுள்ளனர்.

துணை போலீஸ் ஐ. ஜி. என். ஆர். சொர்ணு, மதுரையிலிருந்து கடையநல்லூருக்கு விரைந்துள்ளார்.

## என். வி. என். உடல் நிலை

சென்னை, ஜூன் 24— சென்னை பொது மருத்துவமனையில் சிகிச்சைபெற்று வருகிற அமைச்சர் என். வி. நடராசனின உடல் நிலையில் தொடர்ந்து அபிவிருத்தி ஏற்பட்டுள்ளது என்று அறிவிக்கப்பட்டிருக்கிறது.

நேற்றிரவு அவருக்கு காய்ச்சல் ஏற்படவில்லை.

## இரு தலைகளுடன் பிறந்த அதிசய குழந்தை

மன்னார்குடி, ஜூன் 24— தஞ்சை மாவட்டம் ஒரத்த நாடு மருத்துவமனையில் பாக்கியம் (வயது 30) என்பவருக்கு 2 தலைகள், 4 கைகளுடன் ஒரு குழந்தை பிறந்தது. கண்ணத்தாங்குடியைச் சேர்ந்த நாகராஜன் என்பவரின் மனைவி இவர்.

இந்தக் குழந்தை பிறந்த சிறிது நேரத்தில் இறந்து விட்டது.

பாண்டிச்சேரியில் பரபரப்பு

## வயல் ஓரத்தில் வாலிபர் பிணம்: தலை எங்கே? போலீஸ் தேடுகிறது

புதுவை, ஜூன் 24— புதுவையில் ஒரு வாலிபர், தலை துண்டிக்கப்பட்டு பிணமாகக் கிடந்தார். அவருடைய தலையைப் போலீசார் தேடி வருகிறார்கள்.

அந்தவாலிபர் அரிவாளால் வெட்டிக் கொலை செய்யப்பட்டிருக்கலாம என்று கருதப்படுகிறது. இந்தச் சம்பவம பாண்டிச்சேரியில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியுள்ளது.

இது பற்றிய விவரம் வருமாறு:—

பாண்டிச்சேரி உப்பளம் போலீஸ்கிரவுண்டை அடுத்த வயல் ஓரத்தில், ஒரு மரத்தடியில் இன்று காலை தலையில்லாத நிலையில் ஓர் உடல் கிடந்தது. தலை இல்லாததால் இறந்து கிடந்தவர் யார் என்று தெரியவில்லை.

இறந்து கிடந்தவரின் விலாவில் இரண்டு இடங்களில் வெட்டுக்காயம இருந்ததாகக் கூறப்படுகிறது. அவர், அரிவாளால் வெட்டிக் கொலை செய்யப்பட்டிருக்கலாம என்று கருதப்படுகிறது. உடலில் ஜட்டி மட்டும் தான் இருந்தது. வேறு உடைகள் ஏதுமில்லை.

### சைக்கிளில் ரத்தக்கறை

பிணம் கிடந்த 1 பர்லாங் தூரத்தில் ஒரு சைக்கிள் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது, அந்தச் சைக்கிளில் ரத்தக் கறை படிந்திருந்தது.

அந்தச் சைக்கிள் கட்டிடக் காண்ட்ராக்டர் ஒருவரின் மேற்பார்வையாளரின் உதவியாளருக்குச் சொந்தமானது என்று கூறப்படுகிறது.

தகவல் அறிந்ததும், போலீஸ் சூப்பிரண்டு கதிர்வேல், எமில், போலீஸ் இன்ஸ்பெக்டர்கள் ராமன், கதிர்வேல் ஆகியோர் சம்பவம் நடந்த இடத்திற்கு விரைந்துசென்றனர்.

இந்தக்கொலை பற்றி போலீசார் தீவிரப் புலன் விசாரணை செய்துவருகிறார்கள்.

## டாக்சி டிரைவர்கள் உண்ணாவிரதம்: 4 பேர் கைது

சென்னை, ஜூன் 24— சென்னையில் அண்ணாசிலை எதிரே இன்று காலை உண்ணாவிரதம் போராட்டம் நடத்தப்போன டாக்சி டிரைவர்கள் 4 பேர் கைது செய்யப்பட்டார்கள்.

இது சம்பந்தமாக குசேலர் தலைமையில் உள்ள தமிழ்நாடு டாக்சி ஆட்டோ ரிக்ஷா டிரைவர்கள சங்கத்தின் பொதுச் செயாளர் எம். செலலப்பன், பரமசிவம் (திமுக), பழனி (அதிமுக), ராஜசேகரன் (பழைய காங்கிரஸ்) ஆகிய 4 பேர்களைபோலீசார் கைது செய்தனர்,

அடுத்த நடவடிக்கை பற்றி ஆலோசிப்பதற்காக சென்னை கீழ்ப்பாக்கத்தில் உள்ள சங்க அலுவலகத்தில் சங்க உறுப்பினர்களின் கூட்டம் இன்று மாலை நடைபெறும் என்று சங்கத்தின் உப தலைவர் ரத்தினம் அறிவித்தார்.

புது ஆட்டோ ரிக்ஷாக்களுக்கு அரசு, பர்மிட் வழங்குவதை எதிர்த்து தற்போது தமிழ்நாடு டாக்சி ஆட்டோ ரிக்ஷா டிரைவர்களின் சங்கம் போராட்டம நடத்தி வருகிறது.

## மாணவர்போல் நடித்து வாலிபர் திருட்டு

பாண்டிச்சேரி, ஜூன் 24— வைத்தியக் கல்லூரி மாணவர் என்று கூறிக்கொண்டு வாலிபர் ஒருவர் சில இடங்களில் திருடியுள்ளதாக கைதாகியுள்ளார். இது குறித்து கூறப்படுவதாவது!

பாண்டிச்சேரி கோரிமேடு ஆஸ்பத்திரி காலனியைச் சேர்ந்தவர் சார்லஸ் எட்வின் (வயது 21)

இவர் தியேட்டர் ஒன்றில் படம் பார்த்துக்கொண்டு இருக்கும்போது அருகில் இருந்த புருஷோத்தமன் என்பவரிடம் தன்னை ஜிப்மர் வைத்தியக் கல்லூரி மாணவர் என்று அறிமுகப் படுத்திக் கொண்டாராம்,

புருஷோத்தமன் தன் வீட்டிற்கு சார்லஸ் எட்வினை அழைத்துச் சென்றுள்ளார். அன்று அங்கு சாப்பிட்டுவிட்டு தங்கியிருந்தபோது ஒரு கைகெடிகாரத்தை எட்வின் திருடிக்கொண்டு தலைமறைவாகி விட்டதாகக் கூறப்படுகிறது.

சிதம்பரம் அண்ணாமலை பல்கலைக்கழகத்தில் புருஷோத்தமனின் தம்பி படித்துக்கொண்டுள்ளார். அவரிடம் சென்று எட்வின் புருஷோத்தமின் நண்பர் என்று தன்னை அறிமுகப்படுத்திக்கொண்டு ரூ. 15 வாங்கிச் சென்றதாகவும் கூறப்படுகிறது.

இது போல் வீராம்பட்டு கிராமத்தைச் சேர்ந்த திருஞானத்திடம் ஒரு கைக்கடிகாரத்தயும், ரூ. 450யும் எட்வின் எடுத்துச் சென்றதாகக் கூறப்படுகிறது.

போலீசுக்கு வந்த புகாரின் பேரில் சார்லஸ் எட்வினை போலீசார் கைது செய்தனர். போலீசார் மேலும் தீவிர புலன் விசாரணைசெய்து வருகின்றனர்.

## வானொலி

புதன் ஜூன் 25

**சென்னை-1**

(416.7 மீ)

**காலை**

5-55 வந்தே மாதரம்
6-05 குறளமுதம்
6-10 வழிபாட்டிசை
6-30 திருப்புகழ் —இசைச் சித்திரம்
7-00 தமிழ் மணம்
7-25 பள்ளுப்பாட்டு
7-45 திரைப்பாடல்கள்
8-00 சிக்கில் வி. குஞ்சுமணி, என். நீலா — புல்லாங்குழல்
9-15 திரைப்பாடல்கள்
9-30 ஒலிபரப்பு முடிவு

**பகல்**

12-02 சுசீலா ராமசுவாமி —பாட்டு
12-50 மெல்லிசை
1-00 திருச்சி அஞ்சல்
1-30 டி. நீலா - பாட்டு
2-10 இன்னிசை பி.யு. சின்னப்பா (இ. த.)
2-30 எம். எஸ். நடராஜன் —பாட்டு

**மாலை**

4-00 ஒலிக்கதிர்
5-10 டி. நீலா —பாட்டு
5-30 தொழிலாளர்களுக்கு
6-05 திரைப் பாடல்கள்
6-15 வாத்திய விருந்து
7-00 திரை இசை
7-25 விவசாயிகளுக்கு
8-00 திருச்சி அஞ்சல்
8-30 பட்டல் பற்றி காந்திஜி — திருமலை பேச்சு
8-45 நூல் விமர்சனம் (ஆங்கிலம்)
9-15 இசைச்செல்வம
9-45 திரைப்பட மெட்டுகள்
9-50 சித்திரம்
10-00 விரும்பிக் கேட்டவை
11-05 வானிலை — முடிவு

**சென்னை-2**

(211.3 மீ)

**காலை**

6-55 வந்தேமாதரம்
7-00 செய்திகள் (ஆங்கிலம்)
7-15 மெல்லிசை
7-25 சுசீலா ராமசுவாமி —பாட்டு
9-00 சம்ஸ்கிருதச் செய்தி
9-05 கடிதம் (ஆங்கிலம்)
9-10 ஒலிப்பரப்பு முடிவு

**பகல்**

12-40 மேற்கத்திய இசை
1-30 ஒலிபரப்பு முடிவு

**மாலை**

4-15 ஸ்போர்ட்ஸ்
5-50 திரை மெட்டுகள்
6-00 மேற்கத்திய இசை
6-30 & 7-15 இளைய பாரதம்

**இரவு**

8-00 ஸ்போர்ட்ஸ்
8-05 இளையபாரதம்
8-15 இசைத்தட்டு
8-25 திரை இசை
9-15 ஸ்பாட் லைட்
9-30 தெலுங்கு நாடகம்
10-00 மேற்கத்திய இசை
11-00 முடிவு

**திருச்சி**

(319. மீ)

**காலை**

6-00 வந்தேமாதரம்
6-10 நெறிவிளக்கம்
6-15 பாமாலை
6-30 விவசாயிகளுக்கு
6-35 துதிப்பாடல்கள்
7-00 கம்ப ராமாயணம் —சா. கணேசன்
7-25 மருதாண்டாகுறிச்சி டி. சிவசுந்தரம் —புல்லாங்குழல்
8-20 திரை இசை
8-30 சந்தத்திருப்புகழ் —இசை சித்திரம்
9-00 ஒலிபரப்பு முடிவு

**பகல்**

12-02 திரை இசை
12-50 தேசபக்திப் பாடல்கள்
1-00 பெண்ணுலகம்
1-30 மருதாண்டகுறிச்சி டி. சிவசுந்தரம் —புல்லாங்குழல்
2-10 நலம்பட வாழ்வோம
2-15 வண்ணச்சுடர்
2-30 ஒலிபரப்பு முடிவு

**மாலை**

5-30 தொழிலாளர்களுக்கு
6-10 திரைப்பட இசை
6-40 கிராம நிகழ்ச்சி
7-25 விவசாயிகளுக்கு
8-00 அகல்விளக்கு— நாடகம்
9-15 திருவீழிமிழலைகோவிந்த ராஜபிள்ளை சகோதரர்கள் —நாதஸ்வரம்
10-30 ஒலிபரப்பு முடிவு

சென்னை 1-ல் தமிழில் செய்தி காலை 7-15, 12-40, மாலை 7-15. ஆங்கிலத்தில் செய்தி பகல் 12-00, மாலை 2-00, 6-00, இரவு 9-00. மாநிலச்செய்திகள் பகல் 12-30, 6-30.

திருச்சி: தமிழில் செய்தி காலை 7-15, 12-40, மாலை 7-15 ஆங்கிலத்தில் செய்தி:

காலை 8-10, 12-00, 2-00, 6-00, 9-00.

விவித்பாரதி:

இரவு 9-15 "ஆபீசா வீடா?"—(6)

## "ஹைகோர்ட் நீதிபதி சட்டத்தை தாண்டிசென்றுவிட்டார்"

# சுப்ரீம் கோர்ட்டில் இந்திரா காந்தியின் வக்கீல் வாதம்

**புதுடெல்லி, ஜூன் 24—"இந்திரா காந்தி ஊழல் முறைகளில் ஈடுபட்டார் என்று தீர்ப்பளித்ததன்மூலம் அலகாபாத் ஹைகோர்ட் நீதிபதி சட்டத்தைத் தாண்டிச்சென்றுவிட்டார்"என்றுசுப்ரீம் கோர்ட்டில் பிரதமர் இந்திரா காந்தியின் வக்கீல் பால்கிவாலா கூறினார்.**

"சட்டத்துக்கு பொருள் கொள்வதில் ஹைகோர்ட் நீதிபதி தவறான கருத்தைக் கூறியிருக்கிறார்" என்றும் வக்கீல் பால்கிவாலா கூறினார்.

அலகாபாத் ஹைகோர்ட் நீதிபதி அளித்த தீர்ப்பின் அமுலை நிபந்தனையின்றி பூரணமாக நிறுத்தி வைக்கவேண்டும என்று கோரும மனுவையும், ஹைகோர்ட் தீர்ப்பை ஆட்சேபிக்கும் அப்பீல் மனுவையும வக்கீல் பால்கிவாலா சுப்ரீம் கோர்ட்டில் நீதிபதி வி. ஆர். கிருஷ்ணய்யர் முன்னிலையில் தாக்கல் செய்தார்.

வக்கீல் பால்கிவாலா மொத்தம் சுமார் 3 மணி நேரம் வாதித்தார்.

### 3 மணி நேர வாதம்

வக்கீல் பால்கிவாலா தனது வாதத்தில் கூறியதாவது:—

இந்திரா காந்திக்கு மேடை அமைத்துக் கொடுத்ததும்; மின்சாரசடலைக்கு ஏற்பாடு செய்துகொடுத்ததும், தேர்தல் ஊழலாகும் என்று ஹைகோர்ட் நீதிபதி தமது தீர்பபில் கூறியுள்ளார்.

பிரதமரின் பாதுகாப்பைக் கருதி, பிரதமர் பேசும் கூட்டங்களுக்கு குறிப்பிட்ட உயரம உள்ள மேடையை மாநில அரசுகள் அமைத்துத் தர வேண்டும் என்று மத்திய மந்திரி சபை 1969 நவம்பரில் முடிவு எடுத்து அதுபற்றி எல்லா மாநில அரசுகளுக்கும் உத்தரவு அனுப்பப்பட்டது. இது முதலாவது விஷயமாகும்.

இரண்டாவது விஷயம ஒலி பெருக்கிகளுக்கு மின்சாரம் சப்ளை செய்ய மாநில அரசின் அதிகாரிகள் பயன்படுத்தப்பட்டனர் என்பதாகும். இதைப் பொறுத்தமட்டில் மின்சாரத்தை தனிப்பட்ட கம்பெனி சப்ளை செய்தது. இதற்கு கட்சி பணம கொடுத்தது.

மூன்றுவதுவிஷயம்இந்திரா தனது தேர்தல் வெற்றி வாய்ப்பை அதிகரித்துக் கொள்ள கெஜட் பதிவு அதிகாரியான யஷ்பால் கபூரின் சேவையை பயன்படுத்திக் கொண்டார் என்பதாகும்.

### கடமையை செய்தனர்

மேடைகள் அமைக்கப்பட்டதைப் பொறுத்தவரையில் பிரதமர் தானாக வலியச் சென்று மேடைகளை அமைத்துக் கொடுக்கும்படி கேட்கவில்லை. பிரதமர் பாதுகாப்பைக் கருதி எல்லா மாநிலங்களுக்கும் அனுப்பப்பட்ட உத்தரவின் ஒரு பகுதியாகவே மாநில அரசு மேடைகளை அமைத்துக்கொடுத்திருக்கிறது. எனவே மாநில அரசின் அதிகாரிகளின் உதவியை இந்திரா பயன்படுத்திக் கொண்டதாகக்கூறமுடியாது மாநில அரசின் அதிகாரிகள் தங்களுடைய கடமைகளைச் செய்திருக்கின்றனர். இதை ஊழல் முறை என்று வருணிக்க முடியாது.

எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் சரி, பாதுகாப்பு ஏற்பாடுகள் எல்லாப் பிரதமர்களுக்கும் பொருந்தும்.

பிரதமர்களின் தேர்தல்கள் இவ்வித சிறிய காரணங்களின் பேரில் செல்லாதென அறிவிக்கப்படுமானல் அதற்குமுடிவே இராது.

சட்டம் தெரிந்த எந்த நீதிபதியும் இவ்வித காரணங்களின அடிப்படையில் பிரதமரின் தேர்தலை செல்லாது என்று கூறியிருக்கமாட்டார்.

பால்கிவாலா மேலும் வாதிக்கையில் யஷ்பால் கபூர் டிசம்பர் 29ந் தேதியிலிருந்து ஜனவரி 13-ந் தேதி வரையிலான காலத்தில் பிரதமர் இந்திரா காந்திக்காக தேர்தல் வேலைசெய்தார் என்று ஹைகோர்ட் நீதிபதி கூறியுள்ளது முற்றிலும் ஏற்க முடியாதது" என்று கூறினார். தியாகிகள் கூட்டத்தில் பேசுவதற்காக யஷ்பால்கபூர் சென்றார் என்பதைத் தவிர இந்த தேதிகளுக்கு இடையே எதுவும் நடக்கவில்லைஎன்றும் பால்கிவாலா கூறினார்.

ஹைகோர்ட் நீதிபதிஊகத்தின் அடிப்படையில் தனது முடிவைக் கூறியிருக்கிறார். என்றும் பால்கிவாலா சொன்னார்.

அவர் மேலும் பேசுகையில் ஹைகோர்ட் தீர்ப்பின் மீது நிபந்தனையற்ற தடை அளிக்கப்படாவிட்டால் மனுதாரருக்கு (பிரதமர்) ஈடுசெய்ய முடியாத பாதகம் ஏற்படும் என்றார். நிபந்தனையற்ற தடை அளிக்கப்படாவிடில் அரசியல் விளைவுகள் ஏற்படும் என்றும் கூறினார்.

"நிபந்தனையற்ற தடை விதிக்க முன்மாதிரி இல்லையே என்று கூற முடியாது. ஏனெனில் இவ்விதநிலைமை இதற்கு முன இருந்ததே இல்லை" என்றும்பால்கிவாலாகூறினார்

# ராஜ்நாராயண் வக்கீல் வாதம்

**புதுடெல்லி, ஜூன் 24— ஹைகோர்ட் தீர்ப்பின் மீது நிபந்தனையற்ற பூரண தடை விதிக்கவேண்டும் என்று இந்திரா விடுத்துள்ள கோரிக்கையை ஏற்கக் கூடாது என்று சுப்ரீம் கோர்ட்டில் ராஜ்நாராயணன் வக்கீல் சாந்திபூஷண வாதித்தார்.**

ஹைகோர்ட்தீர்ப்பைமதித்துப் பிரதமர் பதவியிலிருந்து இந்திரா காந்தி விலகினால் அதனால் அவருக்கோ நாட்டுக்கோ பெரும் தீங்கு ஏற்பட்டுவிடாது என்றும சாந்திபூஷண் கூறினார்.

இந்திரா காந்தியின் வக்கீலானபால்கிவாலாவின் விவாதத்துக்குப் பதிலளித்துவாதிக்கையில் சாந்தி பூஷண் இவ்வாறு சொன்னார்.

"ஹைகோர்ட் தீர்ப்பளித்த பிறகும பிரதமர் பதவியில் இந்திரா நீடிப்பதானது சங்கடமான வேதனை தரும் நிலையை உண்டாக்குவதுடன் விரும்பத்தகாத நெறியற்ற ஒரு மரபை ஏற்படுத்துவதாகிவிடும் என்றார் சாந்திபூஷண்.

தேர்தல் வழக்குகளில் கடந்த 20 ஆண்டுகளாக நிபந்தனையுடன் கூடிய தடையை அளிப்பதில் நிபந்தனைகளையும் கட்டுப்பாடுகளையும் விதித்து வந்துள்ளது. இந்த வழக்கில் மட்டும் பூரணத்தடை அளிப்பதென்பது நியாயமாகாது என்றும் அவர் கூறினார்.

"இந்த கோர்ட் பூரணத்தடை அளிக்க மறுத்து அதனால் பிரதமர் பதவியிலிருந்து இந்திரா வெளியேற நேரிட்டால் அதனால் விபரீத விளைவுகள் ஏற்படும் என்றும் விசித்திரமான ஆபத்தான நிலைமை உருவாகி அதைத்தொடர்ந்து உள்நாட்டு பிரச்னைகளும் வெளி ஆபத்துகளும் உருவாகும்" என்று பால்கிவாலா கூறியதை சாந்தி பூஷண்நிராகரித்தார்.

அவர் மேலும் கூறுகையில் கடந்த காலத்தில் எவ்விதப் பிரச்னைகளும் இன்றி புதிய பிரதமர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டதை சுட்டிக் காட்டினார்.

### நம்ப முடியவில்லை

"இந்திரா காந்திக்குப்பதிலாகவேறு ஒருவர் பிரதமராகத் தேர்ந் தெடுக்கப்பட புது காங்கிரஸ் கட்சியில்வேறு ஆளில்லை என்பது நம்ப முடியாததாகும் இது தான் நிலைமை அவ்வளவு பெரிய கட்சியில் அரசியல் சூன்யம் தான் உள்ளது என்றால் இந்நாட்டை ஆள புது காங்கிரசுக்கு உரிமையே இல்லை என்றும் சாந்திபூஷண் சொன்னார்.

"தனக்குப் பதில் வேறு ஒருவர் பிரதமராகத் தேர்ந்தெடுக்கப்பட்டால் அரசியல் ஸ்திரமின்மை ஏற்படும் என்றும் சர்வதேசஉறவில் விபரீத நிலைமை ஏற்படும் என்றும் இந்திரா வாதிக்கமுடியாது" என்றார் அவர்.

"தேர்தலில் ஊழல்முறைகளைக் கையாண்டதாகப் பதவி இழந்த ஒரு பிரதமர் காமன்வெல்த் மாநாடு போன்ற சர்வதேச மாநாடுகளில் கலந்துகொண்டால் அது அந்த நாட்டு மக்களுக்கு வேதனைதருவதாக இராதா?" என்று அவர் கேட்டார்.

ஹைகோர்ட் தீர்ப்பை மதித்து இந்திரா ராஜினாமா செய்திருந்தால் அவர் மீதான மதிப்பு உயர்ந்திருக்கும என்றும அவர் குறிப்பிட்டார்.

அவர் மேலும வாதிக்கையில் மனுதாரர் (இந்திரா) பிரதமராக இருக்கிறார் என்ற காரணத்தால் நிபந்தனையுடன்கூடிய தடையை அளிப்பதில் சுப்ரீம் கோர்ட் 20 ஆண்டுகளாகப் பின்பற்றி வரும் முறையிலிருந்து மாறிவிடக்கூடாது என்றும சாந்தி பூஷண் கூறினார்.

# 'தனிப்பட்ட விரோதம்': பால்கிவாலா வாதம்

ராஜ்நாராயணனின் வக்கீல் சாந்திபூஷணின் வாதத்துக்குப் பிறகு அவருக்குப் பதிலளித்து இந்திராவின் வக்கீலான பால்கிவாலா வாதித்தார்.

அவர் கூறுகையில் "இந்த விவகாரத்தில்பிரதமர்மீதான தனிப்பட்ட விரோதமே மேலோங்கிக் காணப்படுகிறது" என்றார். 'சுருங்கச் சொன்னால் இம்மாதிரி விஷயத்தில் கோர்ட்டானது சில சொந்த நோக்கங்களை அடைவதில் எந்தத் தரப்புக்கும் உதவியாகஇருக்கவிரும்பாது. மாறாக எதையும் தேசிய நலனையே பெரிதாகக் கருதும். எந்த தனிப்பட்ட விரோதத்தையும் பழிவாங்கும்நோக்கத்தையும் கொண்டு கோர்ட்டில் வழக்காடி வெற்றிபெற முடியாது' என்றும் பால்கிவாலா கூறினார்.

## வழக்கை கவனித்தார் இந்திரா மகன்

புதுடெல்லி, ஜூன் 24— நேற்று சுப்ரீம் கோர்ட்டில் பிரதமர் இந்திரா மனுமீது விசாரணை நடந்தபோது கோர்ட் நடவடிக்கைகளை கவனிப்பதற்காக இந்திராவின் மகன் சஞ்சய்காந்தி வந்திருந்தார்.

இந்திரா தேர்தலை எதிர்த்து வழக்குப் போட்டவரான ராஜ்நாராயணனும் வந்திருந்தார். மற்றும் பிலூமோடி, எஸ். எம். மிஸ்ரா, மதுலிமாயி ஆகியோரும் வந்திருந்தனர்.

நேற்று காலை 11-30 மணிக்கு துவங்கிய விசாரணை வழக்கமான இடைவேளைகூட இல்லாமல் மாலை 5 மணி வரை நடந்தது.

வெளியே பெரிய கூட்டம் இருப்பதால் இடைவேளையின் போது வெளியே சென்றால் உள்ளே திரும்பிவர இயலாது என்பதால்இடைவேளை தேவையில்லை என்று நீதிபதி கிருஷ்ணய்யர் உத்தரவிட்டார்.

பாதுகாப்பைக் கருதி நேற்று கோர்ட் மண்டபத்துக்கு உள்ளேயும் பாதுகாப்பு அதிகாரிகள் உட்கார்ந்திருந்தனர். சிலர் முன்வரிசையில் உட்கார்ந்திருந்தனர். முடிவு என்ன என்று தெரிவதற்காக கோர்ட்டுக்கு வெளியே நூற்றுக் கணக்கான மக்கள் காலை முதல் மாலைவரை காத்திருந்தனர்.

## இந்திரா அப்பீல் விசாரணை எப்போது?

புதுடெல்லி, ஜூன் 24— சுப்ரீம்கோர்ட் கோடை விடுமுறைக்குப் பிறகு அடுத்த மாதம 14-ந் தேதி கூடும் போது பிரதமர் இந்திராவின் அப்பீல் மனு முறைப்படி பிரதம நீதிபதி முன்னிலையில் வருமென்று நீதிபதி வி. ஆர். கிருஷ்ணய்யர் உத்தரவிட்டார்.

இந்திரா அப்பீல் வழக்கின் விசாரணை எப்போது துவங்கும் என்பதற்கான தேதியை பிரதம நீதிபதி முடிவு செய்வார்.

ஆசைத்தம்பி யோசனை

## மண்டபம்-ராமேஸ்வரம் படகு போக்குவரத்து

ராமேஸ்வரம், ஜூன் 24— மண்டபம் ராமேஸ்வரம் இணைப்பு ரோடு வேலையை விரிவுபடுத்துமாறு அமைச்சர் நெடுஞ்செழியன் மத்திய அரசுக்கு வேண்டுகோள்விடுத்தார்.

ராமேஸ்வரத்தில் சுற்றுலா மாளிகை ஒன்றைத் திறந்து வைத்துப்பேசுகையில் அமைச்சர் நெடுஞ்செழியன் இந்த வேண்டுகோளை விடுத்தார்.

சுற்றுலா வாரியத் தலைவர் ஏ.வி.பி. ஆசைத்தம்பி அந்த விழாவில் பேசும்போது ராமேஸ்வரத்திற்கும் மண்டபத்திற்கும் இடையே படகு போக்குவரத்து விடலாம் என்று யோசனை தெரிவித்தார்.

சுற்றுலா மாளிகை கட்ட மத்திய அரசு $7\frac{1}{2}$ லட்ச ரூபாய் உதவியது. மாநில அரசு $6\frac{1}{2}$ ஏக்கர் நிலத்தை ஒதுக்கி இருக்கிறது என்று சுற்றுலா வாரிய நிர்வாக இயக்குனர் சி. ராமச்சந்திரன் தெரிவித்தார்.

சுற்றுலாவாரிய உதவிஇயக்குனர் தினதயாளு நன்றி கூறினார்.

# பூஜ்யம் மார்க் வாங்கி தேர்வு பெற்ற மாணவர்: நெடுஞ்செழியன் தகவல்

சென்னை, ஜூன் 24— சில பள்ளிகளில் பூஜ்யம் மார்க் பெற்ற மாணவர்களைக்கூட வெற்றி பெற்றிருக்கிறார்கள் என்று கல்வி அமைச்சர் நெடுஞ்செழியன் கூறினார்.

மாணவர்களின் தரத்தை உயர்த்துவதற்காக, வரும் கல்வி ஆண்டிலிருந்து தேர்ச்சி பெறுவதற்கான குறைந்த பட்ச மதிப்பெண்கள் எல்லா வகுப்பு மாணவர்களுக்கும் நிர்ணயம் செய்யப்பட்டிருப்பதாக கல்வி அமைச்சர் நெடுஞ்செழியன் அறிவித்தார். இந்த விதி முறைகள், தமிழகத்தில் உள்ள எல்லாப்பள்ளிகளிலும் மிகத் தீவிரமாக செயல்படுத்தப்படும் என்று அவர் கூறினார்.

1974-ம் ஆண்டில் தமிழகத்தில் வெளி வந்த நூல்களை அறிமுகப் படுத்தும் விழா கன்னிமாரா நூல் நிலையத்தில் நடைபெற்றது.

சரியான ஆசிரியருக்கான தகுதியை மொத்த ஆசிரியர்களில் 25 சதவிகிதத்தினரே பெற்றுள்ளதாகவும், அது மட்டுமின்றி அனேக பள்ளிகளில், கல்வித் துறையின் விதிமுறைகள் சரிவர பின்பற்றப்படுவதில்லை என்றும் நெடுஞ்செழியன் தெரிவித்தார்.

### இனிமேல் முடியாது

மூன்று நான்கு பாடங்களில் பூஜ்யம் வாங்கிய மாணவர்களைக் கூட சில பள்ளிகள் பாஸ் செய்ய வைத்துவிடுவதாகவும், இனி இம்மாதிரி நடக்க தமிழக அரசு அனுமதிக்காது என்றும்அமைச்சர் தெரிவித்தார்.

வரும் கல்வி ஆண்டிலிருந்து தேர்ச்சி பெறுவதற்கான குறைந்தபட்ச மதிப்பெண்கள் கீழ்க்கண்டவாறு நிர்ணயிக்கப்பட்டுள்ளன. இந்த குறைந்தபட்சமதிப்பெண்ணை சிறிது உயர்த்திக் கொள்ள பள்ளித் தலைமையாசிரியருக்கு அதிகாரம் உண்டு.

6, 7, 8-ம் வகுப்பு படிக்கும் ஒவ்வொரு மாணவரும், எல்லாப் பாடங்களிலும் தனித்தனியாக குறைந்த பட்சம் 15 மதிப்பெண்ணாவது பெற வேண்டும், எல்லாப் பாடங்களிலும் கூட்டிய மொத்த மதிப்பெண் 120-க்கு குறையக் கூடாது.

### கண்காணிப்பு

9, 10, 11-ம் வகுப்பு (செலக்ஷன் வரை) மாணவர்கள் ஒவ்வொரு பாடத்திலும் தனித்தனியாக 20 மார்க்கும் மொத்தமாக 150 மார்க்கும் பெற வேண்டும். இந்த விதிமுறைகள் சரிவர எல்லாப் பள்ளிகளும கடை பிடிக்கப்படுகின்றதா என்பது மிக உன்னிப்பாக கண்காணிக்கப்படும் என்று அமைச்சர் கூறினார்.

கல்வித்தரம் குறைந்ததற்கு மாணவர்களின் எண்ணிக்கைக்கு உரிய வகையில் ஆசிரியர்களின் விகிதாச்சாரம் இல்லாததே காரணம் என்று கூறப்படுவதை மந்திரி ஒப்புக் கொள்ளவில்லை.

ஈரோட்டில் 13 ஆண்டுகளாக ஒரு உயர்நிலைப்பள்ளியிலிருந்து எஸ். எஸ். எல். சி. தேர்வுக்குச் செல்லும் மாணவர்கள் அத்தனைபேரும்தேர்ச்சி பெற்று வருகிறார்கள். ஆனால் அதற்கு பக்கத்தில் உள்ள ஒரு பள்ளியில் 27 சதவிகிதத்துக்கு மேல் மாணவர்கள் தேர்ச்சி பெறுவதில்லை என்று அமைச்சர் கூறினார்.

### 6 மாணவர்களுக்கு 8 ஆசிரியர்கள்

6 மாணவர்களுக்கு 8 ஆசிரியர்கள் பாடம் நடத்தியிருந்தும் கூட அந்த மாணவர்கள் எல்லோரும் தோல்வியடைந்திருக்கிறார்களென்றும்நெடுஞ்செழியன் தெரிவித்தார்.

ஆகையால், கல்வித்தரம் குறைந்து போனதற்கு மாணவர் ஆசிரியர் விகிதாச்சாரம் காரணம் என்பது சரியல்ல என்றார் அவர்.

ஏனைய நாடுகளில் இருக்கும் தமிழ் எழுத்தாளர்களை ஊக்குவிப்பதற்காக புதிய பரிசுத் திட்டம் ஒன்றும் அமைச்சரால் அறிமுகப்படுத்தப் பட்டது.

### உலக எழுத்தாளர் யார் யார்?

தலைசிறந்த உலக எழுத்தாளர்களின் முழு விவரங்களும் அடங்கிய 'யார் யார்' என்ற புத்தகத்தை தமிழில் வெளியிடுமாறு அமைச்சர் கூறிய யோசனையை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் மேடையிலேயே ஏற்றுக் கொண்டது.

1974-ம் ஆண்டு வெளியான நூல்களின் பெயர்கள், அவற்றின் விலை அவற்றை வெளியிட்ட பதிப்பாளர்கள் ஆகிய விவரங்களை தரும் மலர் ஒன்றும் கல்வி அமைச்சரால் வெளியிடப்பட்டது.

பொது நூலக ஆணைக்குழு இயக்குநர் தில்லை நாயகம் ஆரம்பத்தில் அனைவரையும் வரவேற்றார்.

## இன்றைய சினிமா

**சென்னை**

ராம்: யாருக்கும் வெட்கமில்லை
நியூ எல்பின்ஸ்டன் RAJAHAMSAM
நேஷனல் மனோன்மணி
சரஸ்: மாயாபஜார்

**குரோம்பேட்டை**

வெற்றி: யாருக்கும் வெட்கமில்லை

**பல்லாவரம்**

லட்சுமி: வாழ்க்கை ரகசியம்

**தாம்பரம்**

எம். ஆர். தியேட்டர்: எல்லோரும் நல்லவரே
நேஷனல் படிக்காத மேதை
சித்ரா: சங்கே முழங்கு

**கொளத்தூர்**

ஸ்ரீ குமரன் கஸ்தூரிவிஜயம்

# தேர்தல் சட்டம்: திருத்த மந்திரி யோசனை

புனா, ஜூன் 24 - இந்திரா தேர்தல்வழக்கில் அலகாபாத் ஹைகோர்ட் அளித்த தீர்ப்பின எதிரொலியாக தேர்தல் சட்டம் திருத்தப்படவேண்டும் என்று மந்திரி காடில்கர் கூறினார்.

இதுசம்பந்தமாக அவர் ஒரு அறிக்கை வெளியிட்டார்.

மந்திரி காடில்கர் கூறியதாவது:—

"தேர்தல் சட்டம், தீவிரமாக மாறியுள்ள நிலவரத்தையும், மக்களின் கருத்தையும் பிரதிபலிக்கவில்லை. எனவே அதில் தீவிரமான மாறுதல்களைச் செய்ய வேண்டும். இல்லாவிட்டால் பயங்கர அபாயம் ஏற்படும்."

"மக்களின் மாறியுள்ள கருத்தை சட்டம் தனது கருத்தில் கொள்ள வேண்டும். ஏனென்றல் இறுதியாகப் பார்க்கப் போனல் மக்களின் விருப்பமே சட்டத்திற்கு அதிகாரம் தருவது ஆகும்."

பிரதமர் இந்திரா காந்தியின் தேர்தல்செல்லாது என்று கூறும் அலகாபாத்ஹைகோர்ட்டின் தீர்ப்புச் சட்டத்தை வெறும் நுட்ப ரீதியில் மீறியதை அடிப்படையாகக் கொண்டது என்றும், இது கடந்தகால கருத்துக்களை பிரதிபலிப்பது என்றும் அவர் சொன்னார்.

சட்டத்திற்கு பொருள் விளக்கம் தருவதில் நீதித்துறையே உச்ச அதிகாரம் கொண்டது என்றாலும் மாறி வருகின்ற சமூக பொருளாதார யதார்த்த நிலையை அது முற்றிலும் புறக்கணிக்க முடியாது என்றார் அவர்.

## கடல் நீரை குடிநீராக்க ஜனசங்கம் கோரிக்கை

சென்னை, ஜூன் 24--த.நா. ஜனசங்கத் துணைத் தலைவர் கே. நாராயணராவ் தலைமையில் சுமார் 200 ஜனசங்க ஊழியர்கள் மவுண்ட் ரோடில் ஊர்வலம வந்தனர். நகர மக்களுக்கு உடனடியாகப் போதுமான குடிநீர் சப்ளை செய்யக் கோரினர்.

முதல்வர் கருணாநிதிக்கு அனுப்பியுள்ள மகஜரில் நகரக் குடிநீர் பிரச்னைக்கு நிரந்தரத் தீர்வு காணும பொருட்டு, அணுவியல் சக்தியைக் கொண்டு கடல்நீரைக் குடிநீராக்கும் திட்டத்தைக் கொணர வேண்டுமென்று வற்புறுத்தியுள்ளனர்.

# கண் பார்வையற்றவர்களுக்கு உதவும் அதிசயக் கருவி

கலிபோர்னியா, ஜூன் 24— கண் பார்வையற்றவர்களுக்கு உதவி செய்ய புதிய கருவி ஒன்று அமெரிக்காவில் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது.

இதைப் பயன்படுத்தி குழந்தைகள் தங்களுக்குத் தேவையானபொருள்களை காணவோ எடுக்கவோ செய்யலாம்.

வெளவால்கள் செயல்படுவதுபோல், இந்தக்கருவியைப் பயன்படுத்தி செயல்படலாம்.

பிறந்ததிலிருந்து கண் தெரியாதகுழந்தைகளுக்குதொப்பியில் இந்தக் கருவியைப் பொருத்த வேண்டும்.

இந்தக் கருவி ஒருவித ஒலி அலைகளை ஒலி பரப்புகிறது. இதன் எதிரொலி மூலம் பொருள்கள் எங்கெங்கு இருக்கின்றன என்பதை, கருவியை அணிந்த குழந்தை தெரிந்து கொள்ளலாம்.

டென்னிஸ் என்ற 8 மாத குழந்தைக்கு இது பொருத்தப்பட்டிருக்கிறது.

உலகிலேயே இதைப் போன்ற கருவியைப் பயன்படுத்தும் முதல் குழந்தை இவன்தான்.

# மாடப்புறா

எல்லார்வி

## (11) வேலியும் பயிரும்

"வேதாளம் முருங்கை மரத்தில் ஏறிக் கொண்டது என்று விக்கிரமாதித்தன் கதையில் வருவதுபோல் ராஜு மறுபடியும் தன் சொரூபத்தைக் காட்டிவிட்டான் போல் இருக்கிறது!" என்றான் கோபாலன்.

அவன் இப்படிச் சொன்னதும் வனிதாவுக்கு ஆத்திரம் பற்றிக்கொண்டு வந்தது.

"இப்பொழுது என்ன செய்யலாம்?" என்றாள் ஜானகி.

"ஒன்றுமே செய்வதற்கில்லை" என்று கோபாலன் அழுத்தந் திருத்தமாகச் சொன்னான்.

"சங்கிலியைப் பிடித்து இழுத்து ரெயிலை நிறுத்தினால் என்ன?" என்றாள் லலிதா.

"ஊஹூம். அதெல்லாம் தப்பு! ரெயில் நிற்கும் இடத்தில் உன் தம்பி இருப்பானா? அவன் எங்கே போனானோ என்னவோ!"

"அவன் தலைவிதி எதுவோ அதன்படி ஆகட்டும்" என்றாள் ஜானகி துயரத்துடன்.

வனிதா ஒன்றுமே பேசவில்லை. ராஜு மறுபடி தவறான பாதையில் போயிருப்பான் என்று அவளால் நம்ப முடியவில்லை. அந்த அளவுக்கு அவன் இந்தச் சில நாட்களில் நேர்மையாகப் பேசி நடந்து கொண்டான்.

"ஏதோ தவறு நடந்திருக்கிறது; ராஜு குற்றமற்றவன்' என்றே அவள் மனம் வாதித்தது.

எல்லாருமே மௌனமாக இருக்க, ரெயில் தன் போக்கில் போய்க் கொண்டிருந்தது. பேச்சு என்னவோ இல்லையே தவிர அவரவர் உள்ளமும் தனித்தனியே இயங்கிக் கொண்டுதான் இருந்தது. அந்த நிலையை மாற்றி அங்கே ஒரு நல்ல சூழ்நிலையை உருவாக்க எவ்வளவோ முயன்றான் கோபாலன். ஒன்றும் பலிக்கவில்லை.

"இதை இப்படியே விட்டு விடமாட்டேன் லலிதா. ஊருக்குப் போய்ச் சேர்ந்ததும் முதல் காரியமாக இதற்கு நடவடிக்கை எடுத்தே தீருவேன்; அந்தப் பயல் ராஜு எங்கே இருந்தாலும் கண்டுபிடித்தே தீருவேன்."

இந்த அஸ்திரம் ஓரளவு பயன் அளித்தது என்றுதான் சொல்லவேண்டும். ஜானகி, லலிதா இருவர் முகத்திலும் சற்று நிம்மதி தெரிந்தது. பொதுப்படையாக ஏதேதோ பேசத் தொடங்கினார்கள். வனிதா இட முண்டு பண்ணிக் கொண்டு பலகையில் சுருட்டிப் படுத்து தன் முகத்தை மறைத்துக்கொண்டாள். எங்கெங்கோ ஓடிய அவள் மனம் சங்கரனிடம் போய் நிலைத்தது.

சந்திப்பு ஒன்றை ரெயில் அணுகியபோது கோபாலன் ஜானகியின் உடைமைகளைத் தனியே எடுத்து வைத்தான். சகோதரிகள் புரிந்துகொண்டனர். ஜானகி உடையைச் சீர் செய்து கொண்டு தயாரானாள்.

சந்திப்பில் ரெயில் நின்றது. அடுத்த பிளாட்பாரத்தில் ஜானகி செல்ல வேண்டிய ரெயில் தயாராக இருந்தது. அவள் வனிதாவைத் தொட்டாள். அவள் சடக்கென்று எழுந்து, "போய்வா அக்கா; கடிதம் போடு" என்று கூறி விடை கொடுத்தாள்.

கோபாலன், லலிதா இருவரும் உடன் சென்று ஜானகியை அவள் செல்ல வேண்டிய ரெயிலில் ஏற்றி விட்டுத் திரும்பி வந்தார்கள்.

இரண்டு ரெயில்களும் ஒரே நேரத்தில் கிளம்பி இருவேறு திசைகளில் சென்றன. ரெயில் பயணமே செய்தறியாத வனிதா, கண்டு கேட்டு ரசிக்க எத்தனை எத்தனையோ காட்சிகள்! அவற்றையெல்லாம் ரசிக்கும் நிலையிலா அவள் இருந்தாள்?

மேலும் ஒருமணி நேரத்திற்குப் பின் ஒரு நிலையத்தில் கோபாலன் முதலியோர் இறங்கினர். கோபாலன் டாக்சி பிடித்து எல்லாரையும் அழைத்துக் கொண்டு சென்றான்.

வீடு சின்னதாக இருந்தாலும் அழகாகவும் வசதியாகவும் இருந்தது. லலிதா தேவையான, அவசியமான பொருள்களைச் சேர்த்து நேர்த்தியாகக் குடித்தனம் செய்து வருவதைக் கண்டு வனிதா சந்தோஷப்பட்டாள்.

நண்பர் வீட்டில் விட்டுச் சென்றிருந்த குழந்தைகளைக் கோபாலன் போய்க் கூட்டி வந்தான். அவை வனிதாவிடம் மிகவும் பிரியமுடன் பழகி, 'சித்தி சித்தி' என்று சுற்றிச்சுற்றி வந்தது. வனிதாவுக்கு இதமாக இருந்தது. சற்றே நிம்மதியாகவும் இருந்தது. அவர்களுக்கேற்றபடி பேசி, சிரித்து எல்லாம் செய்தாள். அவளிடம் கலகலப்பைக்கண்டு கோபாலன் மகிழ்ந்தான்.

லலிதா குளித்துவிட்டு விரைவில் சமையல் செய்தாள். எல்லாரும் குளித்து ஒன்றாக அமர்ந்து உண்டார்கள். சுவை மிக்க உணவு. அன்போடு ஒருவர் இம்மாதிரி செய்து அதை நுகர்வது வனிதாவுக்கு இதுவே முதல் தடவை.

குழந்தைகள் கல்லி கல்லியாய்ப் பேசிக் கலகலவென்று பழக, லலிதா கள்ளம் கபடம் இல்லாமல் பரிந்து பரிந்து எல்லாம் எல்லாம் செய்ய, கோபாலனும் அன்பைப் பொழிய-எல்லாம் நன்றாகத்தான் இருந்தன. காலமெல்லாம் இப்படியே இந்த ஆதரவில் இருந்துவிடலாம். ஆனால்....

கோபாலனிடம் ஏனோ அவளுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. இடையிடையே ராஜுவின் நினைவும் மனத்தைக் குழப்பியது.

ரெயிலில் வந்த களைப்புத்தீர எல்லோரும் படுத்து உறங்கினார்கள். பிற்பகலில் சிற்றுண்டி காபிக்குப் பிறகு கோபாலன் வனிதாவை அன்பாக அழைத்து அருகே அமரச் சொல்லிப் பேசினான். அவள் எதிர்காலம்பற்றி வினவினான்.

என் அலுவலகத்திலேயே நல்ல பையன்கள் சிலர் இருக்கிறார்கள், அழகு படிப்பு பண்பு சம்பளம் எதிலுமே குறைவில்லாதவர்கள். அவர்களில் ஒருவரை ஏற்பாடு செய்து திருமணத்தை நடத்தி வைக்க என்னால் முடியும். அல்லது இன்னும் சில காலம் வேலை பார்ப்பதாக நீ சொன்னால் அதற்கு ஏற்பாடு செய்யவும் என்னால் முடியும். நீ எதை விரும்புகிறாயோ அதைச் சொல்.

கிரமமாக ஜயராமன் பேச வேண்டிய பேச்சு இது; அவனது இன்றியமையாத கடமை. ஆனால் ஒரு நாள் ஒருபொழுது கூட அவன் இம்மாதிரி பேசியதில்லை. தன் கடமையை நினைத்ததில்லை. எனவே, கோபாலனின் இந்தப் பேச்சு அவள் உள்ளத்தைத் தொட்டது. 'ஒரு வேளை இவரது இயல்பே இது தானோ? உண்மையில் நல்லவந்தானோ!' என்று அவள் மனம் நினைத்தது. என்றாலும் அவசரப்பட்டு எந்த முடிவுக்கும் வந்துவிடக்கூடாதென்றும் உறுதியாக நினைத்தாள் சங்கர்!... நேரில் அன்போடும் பண்போடும் கௌரவமாகப் பழகி, கனவிலே நெருங்கி உறவாடி, நெஞ்சிலே அசைக்க முடியாதபடி இடம் பெற்றுவிட்டவரை மறந்து இன்னொருவருக்கு மாலை இடுவதா?... உத்தியோகம் அதைப்பற்றி அப்புறம் யோசிக்கலாம்.

"என்ன வனிதா?.... என்ன யோசனை?"

"அப்பாவின் மறைவால் ஏற்பட்ட மனப்புண் இன்னும் ஆறவில்லை. கல்யாணத்தைப் பற்றி இப்போது. . . ."

"சரி, வேலை விஷயம்?"

"அதற்குத்தான் இப்போது என்ன அவசரம்?"

"வெரிகுட்!.... நீ வேலைக்குப் போய்த்தான் ஆக வேண்டும் என்று அவசியம் இல்லை. எனக்கொரு தங்கை இருந்தால் அவளை நான் சுமையாகக் கருதுவேனா? எவ்வளவு காலம் வேண்டுமானாலும் நீ இங்கே செல்லப் பெண்ணாக இருக்கலாம்."

நானும் அன்று முதல் அதைத்தான் சொல்கிறேன் என்றபடி அங்கே வந்து பேச்சில் கலந்து கொண்டாள லலிதா.

ராஜு விஷயம்... என்று நெஞ்சடைக்கக் கூறினாள் வனிதா.

எனக்கும் அக்கறை உண்டு வனிதா. காலையில் வெளியே போய்வந்ததேனே, அதற்காகத்தான். பல இடங்களுக்கு தந்தி கொடுத்திருக்கிறேன். பணத்தைத் தண்ணீராகச் செலவு செய்திருக்கிறேன், இன்னும் செலவு செய்யப் போகிறேன். இப்போதுகூட அது சம்பந்தமாகத்தான் வெளியே புறப்பட்டுக்கொண்டிருக்கிறேன் என்று வெளியே புறப்பட்டுச் சென்றான் கோபாலன்.

### முன்கதை

பாசமற்ற அண்ணனால் வீட்டினின்றும் வெளியேற்றப்பட்ட தங்கை வனிதா குடிசை வாழ்வை மேற்கொள்கிறாள். ஆசிரியையாக வேலைபார்த்து நோய்ப் படுக்கையில் இருக்கும் தந்தையைக் காப்பாற்றுகிறாள். பிரமுகர் சிதம்பரத்தின் மகன் குமார் வனிதாவைக் கெடுக்கமுயல்கிறான். பிரமுகர் வீட்டில் வளரும் படித்த வாலிபன் சங்கர் வனிதாவை மணப்பதாக வாக்குறுதி கொடுத்து வேலை வாய்ப்பை முன்னிட்டு டில்லி செல்கிறான். தறிதலைத் தம்பி போலீசில் சிக்கிய செய்தி கேட்ட அதிர்ச்சியின் காரணமாக வனிதாவின் தந்தை உயிர் பிரிகிறது. வனிதாவின் சகோதரிகளும் சகோதரனும் வந்து கூடுகிறார்கள். முழுப் பொறுப்பும் ஏற்கவேண்டிய கடமையுடைய அண்ணன் ஈமச் செலவுக்கு என்ன வழி என்று கேட்டது பொறுக்காமல் வனிதா தான் வேலை பார்க்கும் பள்ளிக்கூட நிர்வாகியிடம் ரூபாய் பெற்று அடக்க ஏற்பாடுகளைச் செய்கிறாள். கடைசி நிமிஷத்தில் போலீஸ்காரர் தம்புசாமி ராஜுவைச் சடங்குக்கு அழைத்து வருகிறார். எல்லாம் முடிந்தபின் ஜானகி, லலிதா, கோபாலன், வனிதா, ராஜு எல்லாரும் பிரயாணப் படுகையில் வண்டி புறப்பட்டபின் கவனித்தபோது ரெயிலில் ராஜுவைக் காணவில்லை.]

அலுவலகத்தின் வேலை சம்பந்தமாக வெளியூர் சென்றிருந்தான், கோபாலன். டூர் முடிந்து வீடு திரும்ப ஒரு வாரம் ஆகும் என்று சொல்லிச் சென்றிருந்தான். மிகமிக வேண்டியவர்கள் வீட்டில் திருமண வைபவம். தக்க பரிசுப் பொருளை வாங்கித்தந்து லலிதா, வனிதா, குழந்தைகளை அந்த வைபவத்திற்குச் சென்று வருமாறு அவன் கூறினான். ஆனால் வனிதா திருமணத்தில் கலந்து கொள்ளும் நிலையில் தன் மனம் இல்லை என்று மறுத்துவிட்டாள். லலிதா மட்டும் குழந்தைகளோடு சென்றிருந்தாள்.

காபி குடித்துவிட்டு ஏதேதோ சிந்தனையுடன் நெடுநேரம் படுத்துக் கிடந்தாள் வனிதா. பிறகு சோம்பல் முறித்தபடி எழுந்து குளிக்கச் சென்றாள். குளிக்கத் தொடங்குகையில் 'போஸ்ட்!' என்று குரல் கேட்டது. பளிச்சென்று அவளுக்கு ஒரு நினைவு ஒரு சபலம்.

கணேசனிடமிருந்து முந்தாநாள் தந்தி வந்திருந்தது 'ராஜு சுகமே வந்து சேர்ந்தான்; பின்னால் தபால் வருகிறது' என்று தந்தியில் குறிப்பிட்டிருந்தது அதனால் அந்தத் தபாலாக இருக்குமோ என்று அவளுக்கு ஆவல். அவசரம் அவசரமாகக் குளித்துவிட்டுச் சரியாக உடுத்துக் கொள்ளாமல் ஓடி வந்தாள். கதவைத் திறந்து இடைகழியில் பார்த்தாள். கேட்டுத் திறந்து கிடந்ததால் இடைகழியில் தாமதிக்காமல் கவரை எடுத்துக்கொண்டு அதைப்பிரித்தபடியே உள்ளே வந்தாள்.

ஜானகிதான் எழுதியிருந்தாள். செய்தியை அறியும் ஆவலால் கதவைத் தாளிட மறந்து தாழ்வாரத்தை அடைந்து கடிதத்தைப் படித்தாள்.

அன்று நிகழ்ந்தவை: புறப்பட்ட ரெயில் நிலையத்தில் சாமான்களையெல்லாம் தன் பொறுப்பிலே பாதுகாத்து வந்த ராஜு எல்லாப் பொருள்களையும் ரெயில் பெட்டியிலே பங்கிடவுசெய்து விட்டு எண்ணிப் பார்த்திருக்கிறான். ஏதோ ஒரு பொருள் குறைவது தெரிந்தது. எத்தனை முறை எண்ணியும் சரிவரவில்லை. குறையும் பொருள் எதுவாக இருக்கும் என்று சிந்தித்து நெடுநேரம் குழம்பியபின் கூஜா காணப்படவில்லை என்பது தெளிவாயிற்று. சாமான்களுடன் எல்லாரும் உட்கார்ந்திருந்த இடத்திலே அதுதங்கி விட்டதுபோல் அவனுக்குத் தோன்றிற்று. தொலைந்தால் எல்லாரும் திட்டுவார்களே என்ற பயத்தில் ரெயிலில் இருந்து இறங்கி ஓடினான். அங்கே...சாமான்களுடன் எல்லாரும் உட்கார்ந்திருந்த இடத்திலே கூஜாவைக் காணவில்லை சுற்றுமுற்றும் பார்த்தான்.

சற்றுத் தொலைவில் முரடன் ஒருவன் போய்க்கொண்டிருந்தான், அவன் முன்புறமாக எதையோ அணைத்துக் கொண்டு போவதுபோல் ராஜுவுக்குப் பட்டது. அவனிடம் ஓடினான்.

அந்த ஆள் தன் வயிற்றிலே கூஜாவை அணைத்தபடி செல்வதைக் கண்டதும் குறுக்கே நின்று வழியை மறைத்தான். "இது எங்கள் கூஜா, கொடு" என்றான்.

முரடன், சீ! என்று அவனைத் தள்ளிவிட்டு வேகமாக நடந்தான். ராஜு விடவில்லை. தொடர்ந்தான். கூஜாவைப் பிடித்து இழுத்தான்.

முரடன் ராஜுவைப் பளார் என்று அறைந்தான். வலி பொறுக்காமல் ராஜு 'ஓ' வென்று அழுதாலும் முரடனை விடாமல் பின் தொடர்ந்தான். இதற்குள் சிலர் அவர்களைச் சூழ்ந்தனர். ராஜுவின் சொற்களிலே நம்பிக்கையும் முரடனின் பேச்சில் அவநம்பிக்கையும் அவர்களுக்கு ஏற்படவே, அவர்கள் விசாரணை செய்தனர்.

இது என் அக்காளின் கூஜா அக்காள் பெயர் லலிதா. அத்தான்பெயர் கோபாலன். ஜி. எல், என்ற எழுத்துக்கள் இதில் இருக்கும். இல்லையானால் கூஜா எங்களுடையதில்லை என்று ராஜு பளிச்சென்று சொல்லவே, ஒருவர் கூஜாவை வாங்கிப்பார்த்தார். ராஜு சொன்னபடி அதில் எழுத்துக்கள் இருந்தன.

எல்லாரும் அந்த எழுத்துக்களைக் கூர்ந்து பார்த்துக் கொண்டிருக்கையில் முரடன் நழுவி விட்டான்.

தொலைந்துபோகிறான்போ. உன் பொருள் உனக்குக் கிடைத்துவிட்டது. இந்தா என்று கூஜாவை ராஜுவிடம் கொடுத்தார் அவர் ஆனால்,

கூட்டம் கலையத் தொடங்கி ராஜுவும் கூஜாவுடன் கிளம்புகிற நேரத்தில் அடுத்த பிளாட்பாரத்தில் நின்றிருந்த ரெயில் புறப்பட்டு விட்டது.

"ஐயையோ!" என்று கூவினான் ராஜு. அவன் நிலைகண்டு எல்லாரும் பரிதாபப்பட்டனர்.

அதே சமயத்தில் முரடனைக் கழுத்திலே கை கொடுத்துத் தள்ளிக் கொண்டு வந்தார் ஒரு போலீஸ்காரர். அவரைக் கண்டதும் பாச உணர்ச்சியுடன் ராஜு 'மாமா!' என்று அலறினான்.

'அட! நீயா?' என்றார் தம்புசாமி கூடியிருந்தவர்கள் வியப்படைந்தார்கள்.

ராஜு தம்புசாமியிடம் எல்லா விவரமும் சொன்னான். "கவலைப்படாதே தம்பி. இந்தப் பழைய கேடியைக் கொண்டு போய்க் கொட்டடியில் சேர்த்துவிட்டு உன்னை உன் அக்காளிடம் நான் அனுப்பி வைக்கிறேன். ஜாக்கிரதையாய்ப் போய்ச் சேர்ந்ததும் எனக்குத் தபால் எழுது என்றார் தம்புசாமி,

என்னைக் காணாமல் எல்லாரும் அழுவார்களே என்று ராஜு அங்கலாய்த்தான்.

தம்புசாமி, "நன்றாக அழட்டும்! அழுது அழுது தீர்க்கட்டும்" என்றார். தொடர்ந்து தடிதடியாய் நாலுபேர் பெரியவர்கள் இருக்க, சிறுவனாகிய உன் தலையில் இத்தனை சாமான்களின் பொறுப்பையும் சுமத்தினது முதல் குற்றம். ஆளுக்கொரு பொருளாக எடுத்துக் கொண்டு போவதற்கென்ன? ரெயில் புறப்படுகிற நேரத்தில் உன்னைக் காணவில்லையே என்று கவலைப்படாதது அவர்களின் இரண்டாவது குற்றம். அவர்களிடம் சொல்லாமல் கூஜாவைத் தேடிக்கொண்டு நீ ரெயில் புறப்படுகிற நேரத்தில் அதைவிட்டு இறங்கினது உன் குற்றம் என்றார்.

சிலர் சிரித்தார்கள்.

"எதற்குச் சிரிக்கிறீர்கள்?" தம்புசாமி வினவினார்.

போலீஸ் இலாகாவுக்கே உரித்தான முறைப்படி குற்றப் பட்டியலை விவரிக்கிறீர்களே என்பதை எண்ணித்தான் என்றார் ஒருவர்.

தம்புசாமியும் சிரித்துவிட்டு ராஜுவையும் முரடனையும் அழைத்துச் சென்றார்.

அடுத்த ரெயிலிலேயே அவர் ராஜுவை ஜானகியின் ஊருக்கு அனுப்பி வைத்தார். அவனும் கூஜாவுடன் ஜாக்கிரதையாகப் போய்ச் சேர்ந்தான்.

இந்த விவரங்களை ஜானகி ஒன்றுவிடாமல் எழுதி மேலும் சில செய்திகளும் எழுதியிருந்தாள். அவற்றைப் படித்து முடித்து நிம்மதிப் பெருமூச்சு விட்டாள் வனிதா.

அப்போதுதான் தன் பிடரிப் பகுதியில் மூச்சுக் காற்றுப் படுவதை அவள் உணர்ந்தாள். திடுக்கிட்டுத் திரும்பினவள் தன் பின்னே, தன்மேல் உரசுகிற நிலையில் கோபாலன் நின்றிருப்பதைக் கண்டாள்.

குளித்த கோலத்தில் நின்றிருந்த அவள் கடிதத்தைக் கை நழுவவிட்டு ஓட்டமாக ஓடிச் சென்று அறையினுள் புகுந்து கதவைத் தாளிட்டுக் கொண்டாள்.

கோபாலன் சற்று நேரம் திருதிருவென்று விழித்தபடி நின்றிருந்துவிட்டுப் பிறகு உடைகளைக் களற்றினான்,

நேரம் சென்றுகொண்டே இருந்தது. வனிதா அறையை விட்டு வெளி வரவே இல்லை. கோபாலனால் பொறுமையாக இருக்க முடியவில்லை, அறைக் கதவின் அருகே சென்று அதைத் தட்டினான். கை வலித்ததுதான் மிச்சம்; "வனிதா, வனிதா!" என்றழைத்தான் வாய் வலித்தது தான் மிச்சம். பிறகு நயமாகப் பேசினான்.

'டூரில் ஒரு திருப்பம் நேர்ந்தது வனிதா. அதனால் திடீரென்று எதிர்பாராவிதமாக வந்தேன். இடைகழியில் கடித உறையைக் கண்டேன். ஜானகியிடமிருந்து என்று தெரிந்தது. தந்தி வந்ததிலே ராஜு சம்பந்தப்பட்ட விஷயம் கடிதத்தில் இருக்கும் என்கிற ஆவம் காரணமாக உன்னைப் போலவே நானும் உன் கைக் கடிதத்தில் லயித்துவிட்டேன். வேறு தப்பாக எதுவும் இல்லை வனிதா. நீ இப்படி நாளெல்லாம் அறைக்குள் கிடந்தால் லலிதா வந்துபார்த்து நாலும் நினைக்க இடமாகும். நான் இதோ, இப்போதே புறப்பட்டுக் கல்யாண வீட்டுக்குப் போகிறேன். நீ வெளியே வந்து தெருக்கதவைத் தாளிட்டுக்கொள் என்றான்.

வனிதா எதற்கும் அசையவில்லை 'மகாபாவி! திட்டம் இட்டு நீ செய்கிற சதியை நான் புரிந்துகொண்டேன். உயிரே போவதானாலும் இந்த வனிதா ஏமாறமாட்டாள்! என்று மனத்துள் உறுதியாக சொல்லிக்கொண்டாள்,

எவ்வளவோ கெஞ்சினான் கோபாலன். பயன் சிறிதும் இல்லாதுபோகவே, அவனுக்கு ஆத்திரம் மூண்டு வந்தது.

"ஏ கேடு கெட்ட நாயே! அநாதைப் பிண்டமே! உன் பத்தினித்தனத்தை நான் நன்றாக அறிவேன் உடல்பொருள் ஆவி அனைத்தையுமே நான் இழக்கத் தயாராக இருக்கிறேன். மரியாதையாகக் கதவைத் திறக்கிறாயா, இல்லையா?"

" ... ... ... ... "

கதவை உடைப்பேன்;...கண்டிப்பாக உடைப்பேன்!

" ... ... ... ... "

அவன் வெறி உச்சம் பெற்றது. முழுமுச்சாக முயன்றான். சயான்டமான அந்தக் கதவின் தாள் அவன் உலுக்கலைத் தாளாமல் கழன்று கொண்டது.

புதுவெள்ளம் போல் அவன் உள்ளே பாய்ந்தான்.

(தொடரும்)

---

அகில இந்திய ரீதியில்

# 5 எதிர்க்கட்சிகள் சேர்ந்த கூட்டணி: தலைவர்கள் ஆதரவு

புதுடெல்லி, ஜூன் 24— 5 எதிர்க்கட்சிகள் சேர்ந்த கூட்டணி அமைப்பதற்கு எல்லா தலைவர்களும் ஆதரவு தெரிவித்துள்ளனர்.

ஆனால் குஜராத்தில் அமைந்ததுபோல் ஜனதா முன்னணி அமைப்பதா, ஒரே கட்சியாக இணைவதா என்பதை இன்னமும் முடிவு செய்யவில்லை,

கம்யூனிஸ்ட் அல்லாத 5 எதிர்க்கட்சிகளின் செயற்குழுக் கூட்டம் டெல்லியில் நேற்று நடைபெற்றது. கூட்டத்தில் ஜெயப்பிரகாஷ் நாராயண் கலந்துகொண்டார்.

அலகாபாத் ஹைகோர்ட் தீர்ப்பைக் கருதி, இந்திரா காந்தியைப் பிரதம மந்திரி பதவியிலிருந்து விலகச் செய்வதற்கான "மாபெரும் சத்தியாகிரகம்" குறித்த முடிவை கூட்டம் ஒத்தி வைத்தது. இன்று மாலை சுப்ரீம் கோர்ட் உத்தரவு பிறப்பிக்கப்பட்ட பிறகு இதன் மீதான முடிவு எடுக்கப்படும்.

கூட்ட முடிவில் பழைய காங்கிரஸ் பொதுச் செயலாளர் மனுபாய் படேல் நிருபர்களிடம் சத்தியாக்கிரகம்பற்றிய முடிவு ஒத்திவைக்கப்பட்டிருப்பதாகத் தெரிவித்தார்.

சத்யாக்கிரகசெயல்திட்டத்தின் பூர்வாங்க நகல் தயாராக உள்ளது அது நாளை மீண்டும் ஆலோசனைக்குவரும் என்று படேல் தெரிவித்தார்.

ஜெ. பி. நாளையும் கலந்து கொள்வார்.

பழைய காங்கிரஸ், ஜன சங்கம், பாரதீய லோக் தளம் சோஷலிஸ்டு, அகாலி தளம் ஆகிய கம்யூனிஸ்டு அல்லாத கட்சிகளிடையில் ஒத்துழைப்பு, இணக்கமான செயல்முறை குறித்து கூட்டம மேலும் ஆலோசனை நடத்தியது. கட்சிகளிடையில் ஒற்றுமை பற்றிய பல்வேறு பிரேரணைகள் பரிசீலிக்கப்பட்டன. ஜனதா இயக்கம் அல்லது சமஷ்டிக் கட்சி அமைப்பதும் இப்பிரேரணைகளில் ஒன்று ஆகும்.

## பொதுக் கருத்து

ஒன்றுபடுவதற்கு ஆதரவாக பலத்த பொதுக் கருத்து உருவாகியிருப்பதாகத் தெரிகிறது. ஆனால் இதற்கான விவரங்களை இனிமேல் தயாரிக்க வேண்டும என்று தெரிகிறது.

பா. லி. த. தலைவர் சரண்சிங் பெரிய தொழிலதிபர்கள் இந்திரா காந்திக்கு ஆதரவு தெரிவித்திருப்பதைச் சுட்டிக்காட்டி "இப்பெரிய தொழிலதிபர்களின் நிதி உதவியைக் கொண்டு தேர்தல்களிலும், பேரணிகளிலும் கோடிக்கணக்கான பணத்தை செலவிட்டு வருகிறது ஆளும் கட்சி, இதை வைத்துக் கொண்டு காங்கிரஸ் தலைவர் பருவாவும் இந்திரா காந்தியும் எப்படி சோஷலிசத்தை நிலைநாட்ட முடியும்? இப்போது இந்நிலைமை மக்களுக்குத் தெளிவுபட்டுவிடும்" என்று கூறினார்.

## ஜெ. பி. பேட்டி

இந்திரா காந்தியின் மனு மீது சுப்ரீம் கோர்ட் செய்யும் முடிவுக்காக தாங்கள் காத்திருப்பதாக ஜெயப்பிரகாஷ் நாராயண் நிருபரிடம் கூறினார் உத்தேச சத்தியாக்கிரகம் காந்திய நெறிப்படி அமையும் என்று கூறினார்,

"ஜெ. பி. எதிர்க்கட்சிகள் ஒன்றுபடுவதை ஆதரித்தாரென்று மனுபாய் படேல் கூறினார். இக்கட்சிகள் இணையாவிடில் நேரக்கூடிய விளைவுகளைப் பற்றி ஜெ. பி. எச்சரித்தாரென்று தெரிகிறது.

இப்போது கட்சிகளின் கூட்டமைப்பு வடிவம் பற்றிய பிரச்னைதான் தங்கள் முன் உள்ளதென்று படேல் சொன்னார். குஜராத் போன்று "ஜனதா கூட்டணி" யாக அமைப்பதா அல்லது சமஷ்டிக் கட்சியாக அமைப்பதா அல்லது எல்லா கட்சிகளும் ஒரே கட்சியாக ஒன்றுபட்டுவிடுவதா என்பதுதான் பிரச்னை என்றார்.

# ஆக. 15 முதல் சென்னையில் டெலிவிஷன்

சென்னை, ஜூன் 24— சென்னை டெலிவிஷன் நிலையம் இந்த ஆண்டு ஆகஸ்டு 15 முதல் இயங்க ஆரம்பிக்கும்.

ஆனால் ஜனவரி 14 பொங்கல் நாள் முதல் தான் முழு அளவுக்கு இயங்கத் தொடங்கும்.

சென்னை டெலிவிஷன் நிலைய டைரக்டர் டி. ஆர். முரளீதரன் இத்தகவலை நேற்று நிருபர்களிடம் கூறினார்.

ஆரம்பத்தில் 2 மணி நேரம் தான் நிகழ்ச்சிகள் நடைபெறும் என்றார் அவர்.

மாலையில் மட்டும் நடத்தப்படும் இந்த நிகழ்ச்சிகளை 10 கிலோ மீட்டர் சுற்றளவு தூரம்வரை ஒலிபரப்பும்.

முழு அளவுக்கு இயங்க ஆரம்பித்ததும், 90 கிலோ மீட்டர் சுற்றளவுக்கு ஒளிபரப்பும். திருப்பதிவரை இந்த நிகழ்ச்சியைப் பார்க்கலாம். அப்போது குறைந்தது 4 மணி நேரம் நிகழ்ச்சிகள் நடைபெறும்.

முழு அளவுக்கு நிகழ்ச்சிகள் நடத்துவதற்கு இப்போதைய டெலிவிஷன் கோபுரம் உயரம் போதாது என்று அவர் கூறினார். அதற்காக 175 அடி உயர கோபுரமும் இரண்டாவது ஸ்டுடியோவும் கட்டப்படும். இது கட்டி முடிக்கப்பட்டால் இந்தியாவிலேயே இதுதான் பெரியதாக இருக்கும்.

இங்கு நடத்தப்படும் நிகழ்ச்சிகள் 80 சத விகிதம் தமிழில் இருக்கும். 12 சத விகிதம் ஆங்கிலத்திலும், மீதி மற்ற மொழிகளிலும் இருக்கும்.

நிகழ்ச்சிகள் 40 சத விகிதம் பொழுது போக்குக்காகவும், மற்றவை பொதுத்தகவல்கள் கல்விசம்பந்தப்பட்டதாகவும் இருக்கும்.

வாரந்தோறும் சினிமாகாட்சிகளும் காட்டப்படும்.

3 வாரம் தமிழ் சினிமாவும் தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய மொழிப் படங்கள் ஒவ்வொரு வாரமும் மாறி மாறியும் காட்டப்படும் என்று முரளீதரன் தெரிவித்தார்,

# காவிரி தண்ணீர் அளவு; தகவல் தரத் தயார்: கர்நாடகம் அறிவிப்பு

பெங்களூர், ஜூன் 24— காவிரித் தண்ணீரின் அளவு பற்றிய தகவலை தமிழக அரசுக்கு அறிவிக்க கர்நாடக அரசு சம்மதம் தெரிவித்துள்ளது.

கர்நாடக மாநிலத்திலுள்ள கிருஷ்ணராஜ சாகர் அணைக்கட்டில் காவிரித் தண்ணீர் தேக்கி வைக்கப்பட்டுள்ளது. அந்தத் தண்ணீர் எவ்வளவு உள்ளது என்பதும், அங்கிருந்து எவ்வளவு தண்ணீர் தினசரி திறந்து விடப்படுகிறது என்பதும் தங்களுக்குத் தெரிவிக்கப்படவில்லை என்று தமிழக அரசு புகார் கூறியிருந்தது. அதற்கு கர்நாடக அரசு பதில் அளித்தபோது மேற்கண்டவாறு சம்மதம் தெரிவித்துள்ளது.

காவிரிநீர்ப் பிடிப்புப் பகுதிகளில் பலத்த மழை பெய்துள்ளதால் நீர்மட்டம் கணிசமாக அதிகரித்துள்ளது.

மழை ரொம்ப குறைவாக இருந்ததால் காவிரி அணைக்கு வரும் தண்ணீர் அளவு குறித்து தகவல் தரப்படவில்லை என்றும் இதை வேண்டுமென்று திட்டமிட்டுச் செய்ததாகக் கருதலாகாதென்றும் கர்நாடக அரசுப் பேச்சாளர் கூறினார்.

1924-ம் வருட ஒப்பந்தத்தின்படி கிருஷ்ணராஜ சாகரத்திலிருந்து 25,000 கியூசெக் தண்ணீர் விட வேண்டும். ஆனால் இந்த ஆண்டு இது வரையில் 100 கியூசெக் வரையில் 800 கியூசெக் முதல் தண்ணீர் விடப்பட்டதென்றும் அண்மையில் த. நா அரசு புகார் கூறியது. தங்களிடமிருந்த சொற்ப நீர் மட்டத்திலிருந்து சரிப் போகத்துக்கு தண்ணீர் விடப்பட்டதென்றும் அதனால் வேண்டுமென்றே தமிழ் நாட்டுக்குத் தண்ணீர் விடப்படவில்லை என்று கருதலாகாதென்றும் கர்நாடகப் பேச்சாளர் விளக்கினார்.

# தங்கக்கடு பறிமுதல்

சென்னை, ஜூன் 24— இலங்கையிலிருந்து விமானத்தில் வந்த பயணி ஒருவரிடமிருந்து 21 கிராம் எடையுள்ள தங்கத் தகடுகளை சுங்க இலாகாவினர் கைப்பற்றினர்.

இதன் மதிப்பு ரூ. 16 ஆயிரம் என்று கூறப்படுகிறது.

கைப்பை ஒன்றில் இது மறைத்து வைக்கப்பட்டிருந்ததாம்.

# இண்டியன் ஆக்சிஜன் தொழிற்சாலையில் வேலைநிறுத்தம் நடக்கவில்லை

சென்னை, ஜூன் 24—இண்டியன் ஆக்சிஜன் கம்பெனி தொழிலாளர்கள் யாரும வேலை நிறுத்தத்தில் ஈடுபடவில்லை. மருத்துவ மனைகளுக்கு ஆக்சிஜன் சப்ளை பாதிக்கப்படும நிலை ஏற்பட நாங்கள் ஒருபோதும் காரணமாக இருக்கமாட்டோம என்று ஆக்சிஜன் கம்பெனி தொழிலாளர் சங்கத் தலைவர் டி. நடராஜன் தெரிவித்துள்ளார்.

சங்கத்தின் சார்பில் இது குறித்து விடுத்துள்ள அறிக்கையில் அவர் குறிப்பிட்டிருப்பதாவது:

நாங்கள் வேலை நிறுத்தம் செய்வதால் மருத்துவ மனைகளுக்கு 'மெடிக்கல் ஆக்சிஜன் சப்ளைசெய்வது பாதிக்கப்படுவதாக சிலரால் வதந்தி பரப்பப்பட்டுள்ளது. இது உண்மையல்ல.

இப்படிப்பட்ட நிலைமை ஏற்பட நாங்கள் சம்மதிக்க மாட்டோம்.

அகில இந்திய அளவில் கம்பெனி நிர்வாகத்திற்கும், அகில இந்தியதொழிலாளர் சம்மேளனத்திற்கும் கருத்து வேறுபாடு உள்ளது. பேச்சுவார்த்தை மூலமாக எங்கள் பிரச்னைகளை தீர்த்துக் கொள்ள நாங்கள் விரும்புகிறோம்.

வேலை நிறுத்தம் செய்யவும் இல்லை. அந்த எண்ணமும் எங்களுக்கு இல்லை.

இவ்வாறு இந்தியன் ஆக்சிஜன் தொழிலாளர் சங்கத் தலைவர் டி. நடராஜன் அறிக்கையில் கூறியுள்ளார்.

# வாலிபர் மர்ம மரணம்

சென்னை, ஜூன் 24—நேற்று காலை சென்னை கடற்கரை ரெயில் நிலையம் அருகில் இருப்புப்பாதையை ஒட்டி தலையில்லாது கிடந்த வாலிபர் ஒருவரின் உடலைப் போலீசார் கைப்பற்றினர். பொது மருத்துவமனைக்கு இந்த உடல் அனுப்பி வைக்கப்பட்டது.

அந்த வாலிபர் யார், எப்படி இறந்தார் என்பது மர்மமாக உள்ளது. போலீசார் மேற்கொண்டு தீவிர விசாரணை செய்து வருகின்றனர்.

## நியூயார்க் பருத்தி மார்க்கெட்

நியூயார்க், ஜூன் 23—

| | |
|---|---|
| ஆரம்ப விலை | 47-70 |
| முடிவு விலை | 47-85 |

# அ. தி. மு. க. கூட்டணி வெற்றி பெருது: காமராஜ் பேச்சு

செங்கற்பட்டு, ஜூன் 24—அண்ணா தி.மு கழகம், புது காங்கிரஸ், கம்யூனிஸ்ட் ஆகிய மூன்று கட்சிகளின் கூட்டணி அமைந்தாலும் தேர்தலில் அந்தக் கூட்டணி வெற்றி பெருது என்று பழைய காங்கிரஸ் தலைவர் காமராஜ் கூறினார்.

நேற்று இரவு மதுராந்தகத்தில் நடந்த காங்கிரஸ் கூட்டத்தில் காமராஜர் பேசிய போது இதைக் குறிப்பிட்டார்.

காமராஜர் மேலும் கூறியதாவது:—

அண்ணா தி. மு. க., புது காங்கிரஸ், கம்யூனிஸ்ட் அணியை மக்கள் விரும்பவில்லை.

இதை என்னுடைய நான்கு மாத சுற்றுப்பயணத்தில் அறிந்துகொண்டேன். இதனால்எனக்குப்புதிய நம்பிக்கை ஏற்பட்டு இருக்கிறது.

அண்ணா திமு கழகத்துடன் தேர்தல் உறவு கொள்ள புது காங்கிரஸ் அதிக ஆர்வம் காட்டுகிறது. அது தனியாக நின்றாலும் சரி மற்ற இரு கட்சிகளுடன் சேர்ந்து நின்றாலும் சரி தேர்தலில் வெற்றி பெற முடியாது.

மக்கள் ஆதரவு தனக்கு இருப்பதாக எம். ஜி. ஆர். சொல்கிறார்.

ஆனால் தாழ்த்தப்பட்ட மக்களும், அரிஜனவகுப்பினரும் தாங்களாகவே முன்வந்து பழைய காங்கிரசின் தேர்தல் நிதிக்குப் பணம் தருகிறார்கள்.

தி.மு.கழக அரசை ஆட்சிப் பீடத்தில் இருந்து அகற்ற தமிழக மக்கள் கொஞ்ச காலம் காத்திருக்கவேண்டும். தனிப்பட்ட விரோதத்தின் காரணமாகஉருவான அண்ணா தி மு கழகம் தானாகக் கலைந்து விடும்.

தமிழ்நாட்டில்நேர்மையான அரசாங்கம் அமையவேண்டும் என்று விரும்புகிறேன். அது இந்தியாவுக்கே எடுத்துக் காட்டாக இருக்கவேண்டும். அது விரைவில் ஏற்படும் என்று நம்புகிறேன என்று காமராஜர் கூறினார்.

# இந்திராவை எதிர்த்து தர்ணா

பாட்னா, ஜூன் 24—அலகாபாத் ஹைகோர்ட் தீர்ப்பைத் தொடர்ந்து பிரதம மந்திரி இந்திரா காந்தி விலகவேண்டும என்று கோரி, பாட்னா நகர மாணவர் செயல் கமிட்டியின் தொண்டர்கள் 12 மணி நேர ''தர்ணா'' கிளர்ச்சி செய்தனர். இந்திரா காந்தியின் கொடும்பாவிகளையும் கொளுத்தினர்.

செங்கற்பட்டில்

# மீண்டும் ப.காங்கிரஸ் கோஷ்டிகள் கைகலப்பு: சோடா பாட்டில் வீச்சு

செங்கற்பட்டு, ஜூன் 24—செங்கற்பட்டில் பழைய காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த இரு கோஷ்டிகள் இடையே 22ம்தேதி விடியற்காலையில் மீண்டுமகைகலப்புஏற்பட்டது சிவாஜி ரசிகர் சங்கத்தின் தலைவரும, தாலுகா இளைஞர் காங்கிரஸ் (பழைய காங்கிரஸ்) தலைவருமான வி, வீரபத்திரனின் வீட்டு அருகே முருகேச முதலியார் தெருவில் இக் கைகலப்பு நடந்தது.

காமராஜர் பேசிய பொதுக் கூட்டம முடிநத சற்று நேரத்துக்குப் பிறகு சிலா வீரபத்திரனின் வீட்டுக்குள் சோடாபாட்டில்களை வீசியதாகக் கூறப்படுகிறது. இதனை தொடர்நது மோதல் ஏற்பட்டது. அப்போது இருவர் காயமடைந்தனர். இந்தஇருவருக்கும செங்கற்பட்டு ஆஸ்பத்திரியில் சிகிச்சை அளிக்கப்பட்டது.

போலீஸ் துணை சூபரின்டெண்ட் எஸ். பி. மாத்தூர், துணை சப் இன்ஸ்பெக்டர் கே, கோதண்டராம் ஆகியோர் விரைந்து சென்று அங்கிருந்த கூட்டத்தை கலைத்தனர்.

வீரபத்திரன் கொடுத்த புகாரின் பேரில் போலீசார் 7பேர் மீது வழக்குப்பதிவு செய்துள்ளனர்.

# உதகையில் கனமழை

உதகை, ஜூன் 24 உதகையில் பருவ மழை தீவிரமாக உள்ளது. பைக்காரா, குந்தா நீர் பிடிப்பு பகுதிகளில் கன மழை பெய்துள்ளதால் நீர் மட்டம் அதிகரித்துள்ளதாக கூறப்படுகிறது.

கூடலூர், நடுவட்டம்பகுதிகளில் சில இடங்களில் மரங்கள் வேருடன் சாய்ந்ததால் போக்குவரத்து தடைப்பட்டது.

# பரிசுசீட்டு திட்டத்தை நீடிக்க ஏஜெண்டுகள் கோரிக்கை

திருச்சி, ஜூன் 24—பரிசு சீட்டு திட்டத்தை வருகிற செப்டம்பர் 15-ந் தேதியுடன் நிறுத்திவிடுவது என்ற முடிவை அரசாங்கம் மறு பரிசீலனை செய்து இத்திட்டத்தை நீடிக்க வேண்டும் என்று பரிசு சீட்டு ஏஜெண்டுகளும், விற்பனையாளர்களும் முதலமைச்சர் கருணாநிதிக்கு வேண்டுகோள் விடுத்துள்ளனர்.

சென்னை நீங்கலாக தமிழ்நாட்டின் மற்ற பகுதிகளைச் சேர்ந்த பரிசு சீட்டு ஏஜெண்டுகள், விற்பனையாளர் ஆகியோரின் பிரதிநிதிகள் கூட்டம் திருச்சியில் நடைபெற்றது. கே. லூன்கரன் ஜெயின் இக்கூட்டத்துக்குத் தலைமை வகித்தார்.

பரிசு சீட்டு விற்பனை மூலம் கிடைக்கும தொகை அரசின் பல சமூகநலத் திட்டங்களுக்குப் பயன்படுகிறது. தவிரவும் பரிசு சீட்டு ஒழிக்கப்பட்டால் பரிசு சீட்டு விற்பனையில் ஈடுபட்டுள்ள நூற்றுக்கணக்கான ஏஜெண்டுகளும் விற்பனையாளர்களும் மற்றவர்களும் வேலை இழப்பர். எனவேஇத்திட்டத்தை நீடிக்க வேண்டும்என்றுகோரி இக்கூட்டத்தில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

பரிசுசீட்டு திட்டம் நீடிக்க வேண்டும் என்று கோரி மக்களிடையே ஆதரவு திரட்டுவது என்றும் இது சம்பந்தமாக முதலமைச்சரிடம் ஒரு மகஜர் அளிப்பதென்றும் கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது. ஜெயப்பிரகாஷின் யோசனையின் பேரில்தான் பரிசு சீட்டு திட்டத்தைக் கைவிட முதலமைச்சர் முடிவு செய்தார் என்பதால் மேற்படி மகஜரின் பிரதியை ஜெயப்பிரகாஷுக்கும் அனுப்பி வைக்க முடிவு செய்யப்பட்டது.

# தஞ்சை மாவட்டத்தில் அரிசி விலை இறக்கம்

மன்னார்குடி, ஜூன் 24—தஞ்சை மாவட்டம் முழுவதும் அரிசி, நெல் விலை குறைந்து வருகிறது. ரூ 2-25க்கு விற்ற ஒரு லிட்டர் அரிசி இப்பொழுது 1-90க்கு கிடைக்கிறது. 57 கிலோ கொண்ட நெல் மூட்டை ரூ. 85 வரையில் விற்கப்படுகிறது.

# சினிமா தியேட்டரில் தீ விபத்து

மன்னார்குடி, ஜூன் 24—மன்னார்குடி அருகில் உள்ள ஒரத்தநாடு தியேட்டரில் திடீரென்று தீ விபத்து ஏற்பட்டது.

தீ வேகமாக பரவி திரை முழுதும் எரிந்து சாம்பல் ஆனது. ரூ. 5 ஆயிரம் மதிப்புள்ள பொருள்கள் நாசமாகியிருக்கும் என்று கூறப்படுகிறது. தஞ்சை தீயணைக்கும் படையினர் விரைந்து சென்று தீயை அணைத்தனர்.

# பஸ் ஊழியர் ஸ்டிரைக்: தமிழக அரசுக்கு ராமமூர்த்தி கேள்வி

மதுரை, ஜூன் 24—சம்பள உயர்வு கோரி பஸ் தொழிலாளர்கள் நடத்தும வேலைநிறுத்தத்தை கருங்காலிகளை வைத்துக்கொண்டு தமிழக அரசு உடைத்து வருகிறது என்று மார்க்சிஸ்டு தலைவர் ராமமூர்த்தி குற்றம் சாட்டினார்.

மதுரையில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் பேசுகையில் பி. ராமமூர்த்தி கூறியதாவது:—

ரெயில்வே தொழிலாளர் போராட்டத்தின் போது, இந்திரா அரசு கட்டவிழ்த்து விட்ட அடக்குமுறையையும் பழிவாங்கும் நடவடிக்கைகளையும் திமுக தலைவர்களும், அமைச்சர்களும் வன்மையாகக் கண்டித்தனர்

ரெயில்வே தொழிலாளர்கள் மீது இந்திரா அரசு ஏவிய அடக்குமுறையையும், பழிவாங்கலையும் ஸ்டிரைக்கை உடைக்க மேற்கொண்ட நடவடிக்கைகளையும் ''அநாகரீகமான நடவடிக்கை'' என்று தி. மு. க. அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் தனது பத்திரிகையில் எழுதினார்.

ஆனால் இப்போது தி மு.க. ஆட்சியாளர்கள் என்ன செய்கிறார்கள்?

கடந்த ஏப்ரல் 4ல் புது டெல்லியில் ஜெ பி தலைமையில் நடந்த பேரணியில் தி. மு. கவும் கலந்து கொண்டு கோரிக்கை சாசனத்தை நடாளுமன்றத்தில் சமர்ப்பித்தனர்.

அந்த கோரிக்கைகளில் ஒன்று அனைவருக்கும் 'தேவைக்கேற்ற குறைந்த பட்ச சம்பளத்தை' உத்தரவாதப்படுத்த வேண்டும் என்பது. அங்கு பேரணி நடத்தி விட்டு கோரிக்கைசாசனம்கொடுத்து விட்டு—இங்கு போக்குவரத்து தொழிலாளர்கள் சம்பள உயர்வு கேட்டால் இல்லை என்கிறார்கள்.

## ஸ்டிரைக்கை உடைப்பதா?

சம்பள உயர்வு பஞ்சப்படி உயர்வு கோரி வேலைநிறுத்தம் செய்தால் கருங்காலிகளைக் கொண்டும் — போலீசைக் கொண்டும் வேலைநிறுத்தத்தை உடைக்கும் நடவடிக்கையில் ஈடுபடுகிறார்கள், சஸ்பெண்ட் செய்கிறார்கள் கைது செய்து சிறையில் அடைக்கிறார்கள்.

ரெயில்வே போராட்டத்தில் இந்திரா அரசு நடந்துகொண்ட விதம் அநாகரீகமானது என்றவர்களே இப்போது போக்குவரத்துத் தொழிலாளர் போராட்டத்தில் நீங்கள் கொண்டுவரும் இந்தப் பழிவாங்கல் அடக்குமுறை நடவடிக்கைக்குஎன்ன பெயர் என்று ராமமூர்த்தி கேட்டார்.

# கருணாநிதியின் கோவை விஜயம்: 2 நாள் நிகழ்ச்சிகள் ரத்து

சென்னை, ஜூன் 24—கோவை மாவட்டத்தில் பொள்ளாச்சி, வால்பாறை முதலிய இடங்களில் தொடர்ந்து பெருமழை பெய்து கொண்டிருப்பதால் ஜூன் 24, 25 ஆகிய இரு நாட்களிலும்முதல்வர் கருணாநிதி கலந்து கொள்ளும் நிகழ்ச்சிகள் ஒத்திவைக்கப்பட்டுள்ளன.

26—6—1975-ம்நாள் வியாழக்கிழமை மட்டும், காலையில் கோவையில் வரவேற்புநிகழ்ச்சிகளிலும் திருமண நிகழ்ச்சிகளிலும், மாலையில் ஈரோட்டில் ஏற்கெனவே திட்டமிட்டுள்ள பெரியார்-அண்ணாநினைவகத் திறப்பு விழா, குடிதண்ணீர்த் திட்டத்துக்கான அடிக்கல் நாட்டு விழா, அறிஞர் அண்ணா நெசவாளர் கூட்டுறவுச் சங்கக் கட்டிடத் திறப்பு விழா, பொதுக் கூட்டம் முதலிய நிகழ்ச்சிகளில் முதலமைச்சர் கலந்து கொள்வார் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

## கோவையில்: தடை உத்தரவு

கோவை, பெரிய நாயக்கன் பாளையம் போலீஸ் டிவிஷன்களில் நேற்றிலிருந்து 7 தினங்களுக்கு தடை உத்திரவு பிறப்பிக்கப்பட்டிருக்கிறது.

முதலமைச்சருக்கு எதிராக கறுப்புக் கொடி காட்டப் போவதாக அ. தி. மு. க. ஊழியர்கள் அறிவித்திருப்பதையும் பதில் நடவடிக்கை எடுக்கப்போவதாக திமுகவினர் அறிவித்திருப்பதையும் தொழிலாளர் யூனியன்கள் பல காரணங்களைக் கூறி ஊர்வலங்கள் நடத்துவதையும்உத்தேசித்து தடை உத்திரவு பிறப்பிக்கப்பட்டது. போலீசாரின் முன் அனுமதியின்றி ஊர்வலம் அல்லது பொதுக் கூட்டம் நடத்த தடை விதிக்கப்பட்டு இருக்கிறது.

# ஊதிய முடக்க சட்டம்: சி. சுப்ரமணியத்திற்கு ராசாராம் கடிதம்

உதகை, ஜூன் 24—மத்திய அரசு கொண்டுவந்துள்ள ''கட்டாய ஊதிய முடக்கச் சட்டம்'' தொழிலாளர்களுக்குத் தீதானது என்றும், உடனே அதைத் திரும்பப்பெற வேண்டும் என்றும் மத்திய நிதிமந்திரி சி. சுப்ரமணியத்திற்கு தமிழக அமைச்சா ராசாராம் கடிதம் எழுதியிருக்கிறார்.

குன்னூரில் நடைபெற்ற நீலகிரி மாவட்டத் தோட்ட உரிமையாளர்களின் 84-வது ஆண்டு மாநாட்டில் கலந்து கொண்டு அமைச்சர் ராசாராம் பேசும்போது கூறியதாவது:—

மத்திய அரசு கொணர்ந்துள்ள கட்டாய ஊதிய முடக்கச் சட்டம் தொழிலாளர்களுக்குத் தீதானது

இதுபற்றி நான் மத்திய அமைச்சர் சி. சுப்பிரமணியம் அவர்களுக்கு ஓர் கடிதமூலம் இந்தச் சட்டத்தை திரும்பப் பெறவேண்டும் என்று எழுதியிருந்தேன். ஆனால் மத்திய ஆட்சியாளர்கள் இந்த எண்ணத்திற்கு விரோதமாகவே செயல்படுகிறார்கள்.

கட்டாயச் சேமிப்புத் திட்டத்தால் எல்லாத் தரப்பு தொழிலாளர்களும் பாதிக்கப்பட்டுள்ளனர். இந்தச் சட்டத்தை இந்தியாவிலேயே தமிழகத்தை ஆளுகின்ற தி. மு. கழகம்தான் எதிர்த்துக் குரல் கொடுத்து வருகிறது. மற்ற மாநில அரசுகள் ''ஆமாம் சாமி'' ஆட்சியாகவே உள்ளன.

தொழிலாளர்களின் தொல்லைகளை உணர்ந்து மத்திய அரசு, கட்டாய ஊதிய முடக்கச் சட்டத்தை உடனே திரும்பப் பெறவேண்டும். மேற்கண்டவாறு அமைச்சர் ராசாராம் கூறினார்.

# சென்னை மார்க்கெட்

சென்னை, ஜூன் 24—

**தங்கம்**

(24 காரட்) சுத்த தங்கம் 10 கிராம் ரூ. 547 00
(22 காரட்) சில்லரை கிராம் ரூ. 51 75

**வெள்ளி**

பார் வெள்ளி (1 கி. கி.) ரூ. 1160 00
உள்ளூர் 1105 00
(வெள்ளி 10 கிராம்) ரூ. 11 70

**மணிலாப்பயறு**

கோடைகால பட்டாணி மொத்த விலை 277 00

**மணிலா எண்ணெய்**

மொத்த விலை ரூ. 740 00
சில்லரை விலை ரூ. 8 00

**விளக்கெண்ணெய்**

(100 கி. கி.) சென்னை கிடங்குடெலிவரி திருப்பத்தூர் மொத்த விலை ரூ. 430 00
சேலம் தாமரை அன்னம் மார்க் 16 05 கி. கி.) ரூ. 74 00

**தேங்காய் எண்ணெய்**

(16.06 கி. கி.) டின் எம்.எஸ்.மார்க் ரூ. 150 00

**நல்லெண்ணெய்**

17 கி. கொண்ட டின் 1-க்கு (அக்மார்க் குருபரன் மார்க்) ரூ. 144 00
முதல் ரூ. 146 00
விற்பனை வரி தனி
சில்லரை கிலோ 1-க்கு ரூ. 9 50

**கடலைப்பிண்ணாக்கு**

70 கி.கி.கொண்ட மூட்டைக்கு எக்ஸ்பெல்லர் ரூ. 74 00

**சர்க்கரை**

பகிரங்க மார்க்கெட் விலை 100 கி. கி. ரூ. 480 00

# சென்னையில் நாளைய நிகழ்ச்சிகள்

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்: புதிய நூல்கள் அறிமுகம்; தமிழிலக்கியக்கொள்கை எட்டாம் கருத்தரங்கு தலைவர் ம. பொ. சிவஞானம. இடம்; மாவட்ட மைய நூலகக் கட்டிடக் கருத்தரங்க அறை. மாலை 6 மணி.

அறிவியக்கப் பேரவை: சிறப்பு சொற்பொழிவு. தலைமை: சாலை இளந்திரையன பங்கு பெறுவோர் வலம்புரிஜான், ஞானசுந்தரம். இடம்; மாவட்ட மத்திய நூலகம் மாலை 6-30 மணி,

சென்னை துறைமுக ஊழியர் கூட்டுறவு வீட்டு மனை சங்கம்: காலனி திறப்பு விழா: தலைமை எ. பி. அம்புரோஸ் திறப்பாளர். அமைச்சர் ராசாராம் இடம்: ஹாஸ்னுபுரம். குரோம் பேட்டை மாலை 5 மணி,







Printed by S. V. G. Sowrirajulu at the M.C.P.P.S. Press, No. 4, South Bank Road, Madras-28, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.

Editor-in-charge: G. Dhanaraj